ஸ்ரீ:



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

𑌯𑌤𑍍𑌪𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌰𑍁𑌹𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵 𑌨𑌿𑌤𑍍𑌯𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌨𑌿𑌷𑍍𑌠𑌯𑌾 ।
𑌵𑌸𑍍𑌤𑍁𑌤𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌤𑍋𑌽𑌹𑌂 𑌤𑌂 𑌜𑌗𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

யத்பதாம்போருஹத்வந்த்வ நித்யகைங்கர்ய நிஷ்டயா,
வஸ்துதாமுபயாதோஹம் தம் ஜகத்குருமாச்ரயே.

ஸ்ரீ ஸ்வாமியின் தௌஹித்ரன்

**தி. அ. பு. ஸ்ரீநிவாஸவரதாசாரியருக்கு**

7—1—78 அன்று ஷஷ்டியப்தபூர்த்தியுத்ஸவம் நடந்தேறியது.



பெருமாள்கோவில் ப்ரதிவாதிபயங்கரம்
**காதி க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி.**

திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை
ஸ்ரீநிவாஸவரதாசாரியர்
ஷஷ்ட்யப்தபூர்த்தி வைபவப் படங்கள்.



திருமாங்கல்ய தாரணம்.



ப்ர. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஷஷ்ட்யப்தபூர்த்தி
கண்டருளும் தம்பதிகள்,
ப்ர. ஸ்ரீநிவாஸாசாரியரின் குடும்பத்துடன்.



மேற்படி தம்பதிகளுடன் அவர்களுடைய மாப்பிள்ளைகளும், மருமான்களும் சோளஸிம்மபுரம். கோ. க சண்டமாருதம் பெரியப்பங்கார் ஸ்வாமியும் ஸேவை ஸாதிக்கிறார்கள்.



ஷஷ்ட்யப்தபூர்த்தி கண்டருளும் தம்பதிகளுடன், அவர்களுடைய ஜாமாதாக்களும் குமாரத்திகளும்.



ஷஷ்ட்யப்தபூர்த்தி கண்டருளும் தம்பதிகளும்.
குடும்பத்தாரும்.



ப்ர. க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அவருடைய குமாரத்திகள்,
ஷஷ்ட்யப்தபூர்த்தி கண்டருளும் தம்பதிகளுடன்
ஸேவை ஸாதிக்கிறுர்.

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# எண்பத்தெட்டு வார்த்தாமாலை

**ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசாரிய தாஸன் செய்யும் விண்ணப்பம்.**

அன்பர்களே! அன்பேவடிவெடுத்தவர்களே! அடியேனுடைய அறுபதாண்டு நிறைவு முதலாக ஆண்டுதோறும் ஏதேனுமொரு மலர் வெளியிட்டுக்கொண்டே வருகிறேனென்பது உலகமறிந்தது. இந்த ஸம்வத்ஸரம் எம்பெருமானுருடைய திருவவதார ஸம்வத்ஸர மென்பதுபற்றி ஸ்வாமி விஷயமாகப் பலபலவகைகளில் தொண்டு புரிந்திருப்பதனுல் வேறுமலர்ஒன்றும் தற்காலம் பிரசுரம்செய்ய முயலவேண்டாவென்றே யெண்ணியிருந்தேன். ஆனுல்'' இவ்வாண்டுக்கான மலர் என்று வருமோ வென்று எதிர்பார்த்திருக்கிரேம்'' என்று பலவிடங்களிலிருந்தும் பல நண்பர்களும் ஆப்தர்களும் எழுதத் தொடங்கிவிட்டபடியால் நமது எண்ணம் நிறைவேருதென்று துணிந்து இதனை யெழுதத் தொடங்குகின்றேன். எண்பத்தெட்டாம்பிராயத்தொடக்கத்திற்கு நினைவுமலராதலால் எண்பத்தெட்டு வார்த்தாமாலை யென்று பெயரிட்டனன்.



இந்த வார்த்தாமாலையில் எம்பெருமானுர் பெருமைகள் முக்கியமாக வெளிவரும். மற்றும் பல்வகைப் பொருள்களையும் அநுபவிக்கலாம்.

## வார்த்தாமாலைத் தொடக்கம்

**1** இராமானுசனும்—அரங்கேசனும். (இராமானுசநூற்றந்தாதி 35.) •பொன்னரங்கமென்னில் மயலேபெருகுமிராமானுசன்.• •ரங்கம் ரங்கமிதிப்ரூயாத் க்ஷுதப்ரஸ்கலநாதிஷு• என்ற வசனப்படி இருமினுலும் தும்பினுலும் திருவரங்கம் பெரியகோயில் என்னவேண்டுமாதலால் அப்படி யாரேனும் சொல்லக் கேட்டாராகிலும் ஸ்வாமி வியாமோஹம் கொள்வராம். ... ... ... •

**2** இராமானுசனும் திருவேங்கடத்தானும். (நூற்றந்தாதியில்–106) *இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்...அவைதன்னொடும் வந்திருப்பிடம் மாயனிராமானுசன் மனத்து.* திருவேங்கடம் முதலான திருப்பதிகளை உறைவிடமாகவுடைய எம்பெருமான் அத்திருப்பதிகளோடுங் கூடவந்து இராமானுசன் திருவுள்ளத்தேயுறைகின்றான்.

**3** இராமானுசனும்– தேவப்பெருமாளும். (நூற்றந்தாதியில்– 31.) *தென்னத்தியூரர் கழலிணைக் கீழ்ப் பூண்டவன்பாளனிராமானுசன்* ஸ்வாமி யாதவப்ரகாசரோடே கங்காயாத்திரை சென்றபோது அவரைவிட்டுப் பிரியநேர்ந்தவன்று ஓரிரவில் விந்தியாடவியில் நின்றும் கச்சிப்பதியில் கொண்டு சேர்த்தவர் தேவப்பெருமாள்; யஜ்ஞமூர்த்தி யென்னும் அத்வைதியை வாதில் வெல்லநேர்ந்தபோது மஹோபகாரம் செய்தவரும் தேவப்பெருமாள்; மற்றும் பல காரணங்களினாலும் தேவப்பெருமாளிடம் பக்தி மிக்கவர்எம்பெருமானார். ... ... ... *

**4** இராமானுசனும்—திருமாலிருஞ்சோலையழகரும். (நூற்றந்தாதியில் 106.) *இருப்பிடம் . மாலிருஞ்சோலையென்னும் பொருப்பிடம். *திருமாலிருஞ்சோலை முதலிய திருப்பதிகளை உறைவிடமாகவுடைய எம்பெருமான் அத்திருப்பதிகளோடுங் கூட வந்து வாழ்வது இராமானுசன் திருவுள்ளத்திலேயாம். ... ... *

**5** இராமானுசனும்—பொய்கையாழ்வாரும். (நூற்றந்தாதி–8 ) *எம்பொய்கைப்பிரான் மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையுங்கூட்டி ஒன்றத்திரித்தன்றெரித்த திருவிளக்கைத் தன் திருவுள்ளத்தேயிருத்தும் பரமனிராமானுசன்.* வேதப்பொருள் விளங்கநின்ற பொய்கையாழ்வார் பாசுரங்களைத் தம் திருவுள்ளத்தே தரித்துக்கொண்டிருப்பவர் எம்பெருமானார். ... ... ... *

**6** இராமானுசனும்—பூதத்தாழ்வாரும். (நூற்றந்தாதி-9) *கோவலுள் மாமலராள் தன்னொடுமாயனைக் கண்டமைகாட்டுந் தமிழ்த்தலைவன் பொன்னடி போற்றுமிராமானுசன் * பாவருந்தமிழால் பேர்பெறுபனுவல் பாவலர் பாதிநாளிரவில், மூவரும் வணங்கி மொழி விளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு· என்று வில்லிபுத்தூரார் பாடியபடியே திருக்கோவலூரில் *திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்* என்று காட்சியைக்கூறினவரான பேயாழ்வாருடைய பதம் பணிபவர் எம்பெருமானார்.

**7** இராமானுசனும்—திருமழிசைப்பிரானும். (நூற்றந்தாதி 12.) *இடங்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவனிணையடிப்போதடங்கு மிதயத்திராமானுசன்.* பல சமயங்களிலும் புக்குப் பரமார்த்தமறிந்துதேறின மஹாயசஸ்வியான திருமழிசைப்பிரானுடைய திருவடிகளிரண்டும் திருவுள்ளத்தே யடங்கப்பெற்றவர் எம்பெருமானார்.

**8** இராமானுசனும்–நம்மாழ்வாரும். (நூற்றந்தாதி–1) *பூமன்னுமாதுபொருந்தியமார்பன் புகழ்மலிந்த பாமன்னு மாறனடி மணிந்துய்ந்தவன் இராமானுசன்.*பண்டருமாறன் பசுந்தமிழானந்தம்பாய்மதமாய் விண்டிடவெங்களிராமானுசமுனிவேழம்.*

**9** இராமானுசனும் - மதுரகவிகளும். (நூற்றந்தாதி—) *எய்தற்கரியமறைகளை ஆயிரமின் தமிழால் செய்தற் குலகில்வருஞ் சடகோபனைச் சிந்தையுள்ளே பெய்தற்கிசையும் பெரியவர் சீரை உயிர்களெல்லாம் உய்தற்குதவுமிராமானுசன்.* இங்குப்

பெரியவர் என்றது ஆசார்ய நிஷ்டையில் பெருமை பெற்ற மதுரகவிகளை. அவருடைய சிறப்பை யெடுத்துரைத்து யாவரையும் உஜ்ஜீவிப்பித்தவர் எம்பெருமானார்.

**10** இராமானுசனும்—குலசேகராழ்வாரும். (நூற்றந்தாதி) *கொல்லிகாவலன் சொல்பதிக்குங் கலைக்கவிபாடும் பெரியவர்பாதங்களே துதிக்கும்பரமனிராமானுசன்* குலசேகராழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளிலும் ப்ராவண்ய முடைய பெரியார்களின் திருவடிபணிபவர் எம்பெருமானார்.

**11** இராமானுசனும்—பெரியாழ்வாரும். *சோராதகாதல் பெருஞ் சுழிப்பால் தொல்லைமாலை யொன்றும் பாராது அவனைப் பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன்தாள் பேராதவுள்ளத்திராமானுசன்* ஸர்வேச்வரனுடைய சக்திவிசேஷங்களை யெல்லாம் மறந்து அவனது ஸௌகுமார்யத்தையே பார்த்து அஸ்தாநே கலங்கிப் பல்லாண்டுபாடும் பெரியாழ்வார்திருவடிகளை இடைவிடாது சிந்திப்பவர்எம்பெருமானார்.

**12** இராமானுசனும்—சூடிக்கொடுத்த நாச்சியாரும். *அரங்கர் மௌலிசூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளலிராமானுசன்* ஆண்டாளுடைய திருவருள் பெற்றுவாழ்ந்தவர் எம்பெருமானார்.

**13** இராமானுசனும்—தொண்டரடிப்பொடிகளும். (*செய்யும் பசுந்துளபத் தொழில் மாலையும் செந்தமிழிற் பெய்யும் மறைத்தமிழ் மாலையும் பேராத சீரரங்கத்தையன் கழற்கணியும் பரன்தாளன்றி ஆதரியா மெய்யனிராமானுசன்.) *பூமாலைகளையும் செய்யதமிழ்ப்பா மாலைகளையும் நம்பெருமாள் திருவடிகளிலே ஸமர்ப்பித்தருளின தொண்டரடிப் பொடியாழ்வாருடைய திருவடித்தாமரைகளையே மிகவிரும்பும் ஸத்யசீலர் எம்பெருமானார்.

**14** இராமானுசனும்—திருப்பாணாழ்வாரும். (நூற்றந்தாதி—11.) *சீரியநான்மறைச் செம்பொருள் செந்தமிழாலளித்த பாரியலும் புகழ்ப்பாண் பெருமாள் சரணாம் பதுமத்தாரியல் சென்னியிராமானுசன்*—வேதஸாரமான அமலனாதி பிரானை யருளிச்செய்த திருப்பாணாழ்வாருடைய திருவடித்தாமரைகளைச் சென்னிக்கு மலர்ந்த பூவாகக் கொண்டவர் எம்பெருமானார்.

**15** இராமானுசனும்—திருமங்கைமன்னனும். *குறையல் பிரானடிக்கீழ் விள்ளாதவன்பனிராமானுசன்.* கலிமிக்க செந்நெல் கழனிக்குறையல் கலைப் பெருமானொலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்கசீயமிராமானுசன்* திருமங்கையாழ்வாருடைய திவ்யப்பிரபந்தங்களை யதிகரித்து அதனால் சிங்கம்போல் விளங்குபவர் எம்பெருமானார்.

**16** இராமானுசனும்—நாதமுனிகளும். (நூற்றந்தாதி—20) *சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால் வாரிப்பருகு மிராமானுசன்.* ஆழ்வாரருளிச் செயல்களின் ரஸாநுபவமே போது போக்கான ஸ்ரீமந்நாதமுனிகளைச் சந்ததம் சிந்தை செய்பவர் எம்பெருமானார்.

**17** இராமானுசனும்—ஆளவந்தாரும். (நூற்றந்தாதி—21.) *தூய்நெறி சேர் எதிகட் கிறைவன் யமுனைத்துறைவனிணையடியாங்கதி பெற்றுடைய விராமானுசன்.*

ஸதநுஷ்டான ஸம்பன்னராய் யதிஸார்வபௌமரான ஆளவந்தாருடைய திருவடிகளை யே தஞ்சமாகக் கொண்டவர் எம்பெருமானுர்.

**18** இராமானுசனும்—கூரத்தாழ்வானும். *மொழியைக் கடக்கும் பெரும் புகழாளராய் வஞ்சமுக்குறும்பாங்குழியைக் கடந்தவரான கூரத்தாழ்வான் அடிபணிய நின்றவர் எம்பெருமானுர்.

**19** இராமானுசனும்—எம்பாரும். *பற்பமெனத் திகழ் பாசுரத்தினுல் வடிவழகை யநுபவித்து *இல்லையெனக் கெதிரில்லையெனக்கெதிரில்லை யெனக்கெதிரேயென்று தாண்டவம் செய்த எம்பார் பணிய நின்றவர் எம்பெருமானுர்.

**20** இராமானுசனும்–முதலியாண்டானும். *பாதுகே யதிராஜஸ்ய கதயந்தி யதாக்க்யயா* என்கிறபடியே தமக்குப் பாதுகையாய் நின்ற ஆண்டானடிபணிய நின்றவர் எம்பெருமானுர்.

**21** இராமானுசனும்—திருக்குருகைப்பிரான் பிள்ளானும். (உபதேசரத்தின மாலை) *தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப் பிரான் பிள்ளான் உள்ளாருமன்புடனே மாறன் மறைப்பொருளை ஆருயிரப்படியாகப் பணிக்கப் பேரருள் செய்தவர் எம் பெருமானுர்.

**22** இராமானுசனும்—பட்டரும். கூரத்தாழ்வான் திருக்குமாரராய் விளக்கில் கொளுத்தின தீவட்டிபோலே விளங்கின பட்டரை எம்பார் திருவடிகளிலே ஆச்ரயிக்குமாறு அருள்புரிந்தவர் எம்பெருமானுர்.

**23** இராமானுசனும்—நஞ்சீயரும். தாம் திருநாட்டுக் கெழுந்தருளும் ஸமயத் திலே பட்டரை நோக்கி நியமித்தருளினபடியே அவர்தாம் திருத்திப்பணிகொண்ட நஞ்சீயர் நிச்சலும் போற்ற நின்றவர் எம்பெருமானுர்.

**24** எம்பெருமானுரும்—அருளாளப் பெருமாளெம் பெருமானுரும்.—யஜ்ஞ மூர்த்தியென்கிற திருநாமத் தோடிருந்து பதினெட்டுநாள் வாதப்போர் புரிந்தவரை வென்று அடிமைகொண்டு அருளாளப் பெருமாளெம்பெருமானுரென்று திருநாமஞ் சாற்றி உய்வித்தவர் எம்பெருமானுர்

**25** எம்பெருமானுரும்—திருமலையனந்தாழ்வானும். *பகவத்விஷய கால க்ஷேபத்தில் *ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்றவளவிலே வந்தவாறே தமக்குப் பிரதிநிதியாக அனந்தாழ்வானைத் திருமலையிலே கைங்கரியங்கள் செய்யப் போகவிட்டவர் எம்பெருமானுர்.

**26** எம்பெருமானுரும் — திருக்கச்சிநம்பிகளும். *பஞ்சாசார்யபதாச்ரித:* என்று ஐந்து ஆசாரியர்களை யடிபணிந்தவராக ப்ரஸித்தரான ஸ்வாமிக்குத் திருக்கச்சி நம்பிகளையும் ஒரு ஆசார்யராகச் சிலர் நினைப்பதும். சொல்லுவதுமுண்டு; உண்மை அப்படியில்லை. *ராமாநுஜஞு நேர் மாந்யம்* என்றத்தனை.

**ஸ்ரீ வைஷ்ணவ தரிசனத்திற்கு எம்பெருமானார்தரிசனமென்று பெயரிட்ட நம்பெருமாள் பெருமையைப் பலபடியாக அநுபவிப்போம்.**

**27** தொண்டரடிப்பொடியாழ்வார் *அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே என்று பதின்கால் கூறித் திருப்பள்ளியெழுச்சி பாடினார் உண்மையில் பெரிய பெருமாளுக்கு உறக்கமில்லை; *உறங்குவான் போல் யோகு செய்யும் பெருமானத்தனை. *கள்ளநித்திரை கொள்கின்றதாகவே கூறுகின்றார்கள். பட்டரும் *நித்ராஸி ஜாகர்யயா* என்றருளிச் செய்கிறார். ஆக, உறங்காதவனை உறங்குவதாக வைத்து உணர்த்துவது தகுதியற்றது. மேலும் உறக்கமென்பது தமோகுணத்தின் காரியம்; சுத்த ஸத்வ நிதியான எம்பெருமானுக்கு தமோகுண கார்யமான உறக்கத்தை வைத்துப் பேசுவது அபசாரமுமாகும்—என்று இங்ஙனே சங்கிப்பவர்களுக்கு ஸமாதானம்.

**28** திருப்பள்ளியெழுச்சிக்குத் தனியன் சுலோகமிட்டருளியுள்ளார்கள் பூருவாசாரியர்கள். (அதாவது)—*தமேவ மத்வா பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவத் அர்ஹணீயம்* என்பது. ''அர்ச்சாவதாரத்தில் எம்பெருமானுக்குத் திருவாராதநாதி உபசாரங்கள் செய்வதானது உலகில் மஹாராஜர்களுக்குச் செய்வது போல்'' என்று பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளில் கூறப்பட்டுள்ளது. மஹாராஜர்களுக்கு வந்திகள் வந்து ஸுப்ரபாதம் பாடுவதுண்டாகையாலே அந்த க்ரமத்தை யநுஸரித்து எம்பெருமானுக்குத் திருப்பள்ளியெழுச்சி அமைந்தது. ஆகவே எம்பெருமானை அரசனாக வைத்துப் பேசுவதில் ஔசித்யமுண்டு; அரசனது தன்மைகளும் எம்பெருமானது தன்மைகளும் ஒத்திருக்கும்படியை மூதலிப்போம்.

**29** அரசனுக்கு ஐந்து விதமான நிலைமைகள் இருப்பது போலவே எம்பெருமானுக்குமுள்ளன. அரசனுடைய நிலைமைகளாவன—(1) பகற்போதில் ஸகல பரிஜந ஸேவ்யனாய்க் கொண்டு தன் வீறு தோற்ற நியாயாலயத்திலிருந்து நியாயம் செலுத்துகை. (2) ராஜ்யத்திலுள்ளாருடைய குணதோஷங்களையறிகைக்காக இரவிலே பிறரறியாதபடி கறுப்புடுத்து நகரசோதனம் பண்ணுகை. (3) ஜனங்களின் சிக்ஷரக்ஷைகளுக்காக மூன்று நான்கு அந்தரங்கர்களோடே கூடியிருந்து ஏகாந்தமாகக் கார்யவிசாரம் செய்கை. (4) துஷ்டஜந்துக்களை நிரஸிப்பதற்காக வேட்டையாடுகை. (5) வேட்டையாடின விடாய் தீரப் பூந்தோப்புகளிலே அபிமத விஷயங்களோடே விளையாடுகை. ஆகியஇவ்வைந்தும்அரசருக்குரிய நிலைமைகளாம்.

**30** *பொங்கோதம் சூழ்ந்தபுவனியும் விண்ணுலகும் அங்கு ஆதுஞ்சோராமே ஆள்கின்ற வெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்* என்னப்பட்ட ஸ்ரீரங்கராஜனுக்கும் இங்ஙனே ஐந்து நிலைமைகள் உள்ளன வென்பது *விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய் கடல்சேர்ப்பாய் மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்திற் காணக்கூடியது. கீழே விவரித்த அரசனது நிலைமைகளுக்கும் எம்பெருமானது நிலைமைகளுக்கும் எங்ஙனே ஒற்றுமையென்னில் கேண்மின்;

**31** பகலோலக்கமிருக்கை.—அரசன் பகற்போதில் ஓலக்கமிருப்பது போல எம்பெருமான் *வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:. ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ* என்கிறபடியே *பகற்கண்டே னென்று ஒருபகலான பரமபதத்திலே நித்யமுக்தர் ஸேவிக்க ஓலக்க மிருப்பதாக பகவச் சாஸ்த்ரங்களாலறிகிறோம்.

**32** கறுப்புடுத்துச் சோதிக்கை.—அரசன் இராப்போதுகளில் பிறரறியாதபடி கறுப்புடுத்து நகரசோதநம் பண்ணுமாபோலே எம்பெருமான் *இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் *உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறிதி* என்கிறபடியே அந்தர்யாமியாய் மறைந்து வர்த்திக்கின்றான்.

**33** காரியம் மந்த்ரிக்கை—அரசன் சிக்ஷைரக்ஷைகளுக்காக மூன்று நான்கு அந்தரங்கர்களோடே யிருந்து ஏகாந்தமாகக் கார்யவிசாரம் செய்யுமாபோலே *பாற்கடல் யோகநித்திரை செய்யுமெம்பெருமான் ஸங்கர்ஷண ப்ரத்யும்நாதி வ்யூஹமூர்த்திகளோடே கூடியிருந்து சேதநரக்ஷணோபாயங்களைச் சிந்திக்கின்றான்.

**34** வேட்டையாடுகை.—அரசன் துஷ்ட ஸத்வநிரஸநார்த்தமாகக் காட்டை நாடி வேட்டையாடுமாபோலே எம்பெருமானும் *காட்டை நாடித் தேநுகனும் களிறும் புள்ளுமுடன் மடிய வேட்டையாடி வருவானை விருந்தாவனத்தே கண்டோமே* என்கிறபடியே *விநாசாய ச துஷ்க்ருதாம்* என்ற துஷ்க்ருத் விநாசநத்திற்காக விபவாவதாரங்கள் செய்யாநின்றான்.

**35** ஆராமங்களிலே விளையாடுகை—அரசன் வேட்டையாடின விடாய் தீரப் பூந்தோப்புகளிலே அபிமத விஷயங்களோடே விளையாடுமா போலே எம்பெருமான் ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களிற் செய்த விரோதி நிரஸனங்களினாலுண்டான விடாய் தீரப் பரம போக்யங்களான *ஆராமஞ் சூழ்ந்த கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரம் முதலான திவ்ய தேசங்களிலே இன்சுவைமிக எழுந்தருளியிருக்கை. ஆக அரசனுக்கும் அரங்கனுக்கும் இத்தன்மைகளாலே ஒற்றுமை பொருந்திற்று.

## அரங்கனை ரத்னமாக வநுபவித்தல்

**36** ரங்கராஜன் தெய்வரத்னம். உலகத்துப் பொருள்களில் ரத்னமென்பதொன்றே மிகச் சிறந்தது தெய்வங்களுக்குள் அரங்கனே மிகச் சிறந்தவன். பிள்ளைப்பெருமாளையங்கார் *யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீயென்றால் அஃதுனக்கு வியப்பாமோ?* என்றார் கலம்பகத்தில்.

**37** ரத்னமானது ஒளியினாலே மேன்மைபெறும். ஸ்ரீரங்கநாத ரத்னமும் தனக்கு ப்ரபையான ஸ்ரீரங்கநாச்சியாராலே மேன்மை பெறுகிறபடி. இது பட்டர் நிர்வாஹம்.

**38** ரத்தனம் எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் முன்தானையிலே (துணியின் தலைப்பிலே) முடிந்து ஆளலாம்படி ஸுலபமாயிருக்கும்; அரங்கனும் *பத்துடையடியவர்க்கு எளியவன்* என்கிறபடியே பக்த ஸுலபன்.

**39** ரத்னமானது விலைமதிப்பறியாதான் கையில் அகப்பட்டு அற்பவிலைக்கு மாறும்; அதுவே மஹாராஜன் கையில் கிடைத்து ஸ்வயம் போக்யமாகும். எம்பெருமானும் அல்பர்களால் அல்பப்ரயோஜனம் விரும்பப்படுவன். ஆழ்வார்களுக்கும் பரமைகாந்திகளுக்கும் *தேனை நன் பாலைக்கன்னலையமுதை* என்றும் *எனக்குத்தேனே பாலே கன்னலேயமுதே* என்றும் அருளிச்செய்கிறபடியே பரம போக்யனாயிருப்பன்.

**40** ரத்னம் தன்னை யுடையவனை மார்பு நெறிக்கப் பண்ணும்; எம்பெருமானும் தன்னைப் பெற்றவர்களை *எனக்காரும் நிகரில்லையே* என்று செருக்கிப் பேசப் பண்ணுவன்.

**41** ரத்னம் இடையில் ஒரு புருஷனைக் கொண்டே வாங்கப்படும். தரகரிகள் உண்டே. எம்பெருமானும் *வேதம் வல்லார்களைக் கொண்டே ஸ்வீகரிக்கப்படுவன்.

**42** ரத்தனம் சிலசில ஆச்ர்யங்களில் அதிகமான மதிப்புப்பெறும். எம்பெருமானும் ஆழ்வார்களின் திருவாக்கில் புகுந்து புறப்பட்ட விடங்களிலே பெருமேன்மை பெற்றிருப்பன். ஆலயங்கள் அழ்வார் பாடல் பெருவிடில் மதிப்பில்லையே.

**43** க்ருத்ரிமமான கல்லும் ரத்னமென்று பேர் சுமந்து போலியாக நின்றாலும் வாசியறிய மாட்டாதவர்களே பிரமிக்கும்படியாய் விலக்ஷணர்கள் அதில் மயங்காதேயிருப்பர்கள். அதுபோல தேவதாந்தரங்களும் பகவானென்று பேர்சுமந்து போலியாக நின்றாலும் ராஜஸ தாமஸர்கள் அவற்றிலே பிரமித்திருப்பர்களேயன்றி சுத்த ஸாத்விகர்களான விலக்ஷணர்கள் அவற்றை அடுப்பிடுகல்லாகவே நினைத்திருப்பர்கள்.

## அரங்கனைத் தெய்வவண்டாக அநுபவித்தல்

**44** அரங்கன் தெய்வவண்டெனத்தகுவன். வண்டுபூங்கொத்தில் சுழலமிடும்; ஸ்ரீரங்கராஜ (ப்ருங்கம்) வண்டு *லக்ஷ்மீ கல்பலதோத்துங்க ஸ்தநஸ்தபகசஞ்சலமிறே

**45** வண்டு கமலமலரிற் படிந்து அங்குள்ள ஸாரத்தை யெடுத்து ஜீவிக்கும். அரங்கன் *போதிற்கமல வன்னெஞ்சம்* என்றும் *பக்தாநாம் யத் வபுஷி தஹரம் பண்டிதம் புண்டரீகம்* என்றும் சொல்லப்படுமதான பக்தர்களின் ஹ்ருதய புண்டரீக மலரிற் படிந்து அங்குள்ள ஸாரத்தைக் கவர்ந்து களிப்பவன். ஆனதுபற்றியே "ஸ்ரீரங்க ராஜப்ருங்க: மே ரமதாம் மாநஸாம்புஜே" என்றார் பட்டர்.

**46** வண்டு செவிக்கின்பமாகக் கீதம் பாடும். அரங்கனுடைய பாட்டின்பம் (உத்தரசதகத்தில்) *சைலோக்நிச்ச ஜலாம்பபூவ ...த்வம் தேஷ்வந்யதமாம் பபூவித பவத் வேணுக்வணோந்மாதநே* என்று பட்டரால் அற்புதமாகப் பேசப்பட்டது.

**47** வண்டு சோலைகளிலே சுழலமிடும். அரங்கன் *வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ்சோலை கொண்டல் மீதணவுஞ் சோலை குயிலினங் கூவுஞ்சோலையான ஆராமஞ் சூழ்ந்த வரங்கத்தே சுழலமிடக் காணா நின்றோம்.

**48** வண்டு மதுவைப் பருகித் தென்னா தெனாவென்று முரலும். அரங்கன் பக்தாம்ருதமான திருவாய்மொழியைப் பருகி *பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடித் தென்னாவென்னும் என்னம்மான்* என்கிறபடியே தென்னா தெனாவென்று தெகுடாடுவன் இது நம்மாழ்வாரநுபவம்.

**49** வண்டு பத்மாபிநிவேச முடையது. பதுமத்தில் அபிநிவேச முடைய தென்கை. அரங்கனும் (சிலேடையினால்) பத்மாபிநிவேச முடையவன். பத்மாயாம் அபி நிவேசமென்ற படியாய் ஸ்ரீரங்கநாச்சியார் பக்கலில் அபிநிவேச முடையவன் என்க.

**50** வண்டு சாகாஸஞ்சார முடையது. அரங்கனும் அங்ஙனே. (இதுவும் சிலேடை) வண்டுகளின் ஸஞ்சாரம் கிளைகளிலே; அரங்கனுடைய ஸஞ்சாரம் வேத சாகைகளிலே யென்க.

**51** நெருப்பைக் கண்டு அஞ்சியொதுங்குகிற வண்டு முண்டு; அஞ்சாமல் அணுகுகிற வண்டு முண்டு; இவ்விரண்டையும் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியிலருளிச் செய்தார். (எங்ஙனே யென்னில்;) (1-2-9) திருப்பிரிதிப் பதிகத்தில் *தாதுமல்கிய பிண்டி விண்டலர்கின்ற தழல்புரை யெழில் நோக்கிப் பேதை வண்டுகள் எரியென வெருவரு பிரிதி* என்றருளிச்செய்தார் பிண்டியாவது அசோகமரம் அசோக மலர் பூத்தால் அப்போதுண்டாகுமழகு நெருப்பு ஜ்வலிப்பது போலிருக்கும்; அதைக் கண்டு வண்டுகள் நெருப்பென்று அஞ்சி யொதுங்கி நிற்பதாக இங்குச் சொல்லிற்று. மேலே திருவெள்ளறைப் பதிகத்தில் (5-3-9) *ஓங்கு பிண்டியின் செம்மலரேறி வண்டுழிதர* என்றருளிச் செய்தார். ஆகாசாவகாசம் வெளியடையும்படி வளர்ந்த அசோகமரம் செக்கஞ்செவேலென்று நெருப்புப் போன்ற பூக்களினால் நிறைந்திருக்கவும் வண்டு அஞ்சாதே அதில் ஏறியதாம் பெரிய பெருமாள் இதுகாறும் திருப்பிரிதி திவ்ய தேசத்து வண்டு போல நெருப்புக்கு அஞ்சியிருந்து, இப்போது திருவெள்ளறைப்பதி வண்டு போல அஞ்சாதே அதிற் புகுந்தனர்.

## அரங்கனைச் சந்திரனாக அநுபவித்தல்

**52** சந்திரன் *நவோ நவோ பவதி* என்று வேத மோதினபடியே புதிது புதிதாகத் தோன்றுபவன் எம்பெருமான் * எப்பொழுதும் நாள்திங்களாண்டூழி யூழி தொறும் அப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதமே* என்கிறபடியே நித்யாபூர்வமாகத்தோன்றுவன். இதை அநுபவரஸிகர்களின் உள்ளமுணருமேயல்லது நம்போன்றவர்கள் அறியார்.

**53** சந்திரன் அம்ருதகரன் என்று பேர் பெற்றவன்; அம்ருதகிரணன் என்றபடி. அம்ருதகரன்—மோக்ஷப்ரதன் என்றபடி அம்ருதமென்று மோக்ஷத்திற்கும் பெயர் இது வேதாந்த நூல்களில் ப்ரஸித்தம்

**54** சந்திரன் *யதா ப்ரஹ்லாதநாச் சந்த்ர:* என்றபடி தன்னுடைய காட்சியினால் அனைவரையும் களிக்கச் செய்வன்; இஃது எம்பெருமானுக்கு அஸாதாரணம்.

**55** சந்திரன் குளிர்ச்சியே வடிவெடுத்தவன். எம்பெருமானுக்கு இது கேட்கவேணுமோ? *சந்த்ரமா மநஸோ ஜாத:* என்ற புருஷஸூக்தத்தின்படி எம்பெருமானுடைய திருவுள்ளத்தில் நின்றும் தோன்றினபடியாலே. சந்திரன் குளிர்ச்சி பெற்றான்; எம்பெருமானுக்கோ குளிர்ச்சி இயற்கை.

**56** சந்திரன் சந்திர புஷ்கரிணியில் அவகாஹநம் பெற்றவன்; இது *தாபத்ரயீமைந்தவ புஷ்கரிண்யாம்* என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகத்தின் உத்தரார்த்

தத்தினால் விசதம். ஸ்ரீரங்கசந்த்ரனுக்கும் சந்த்ர புஷ்கரிணியில் அவகாஹனம் இற்றைக்குமுண்டு; இது *பூர்வேண தாம் தத்வதுதார நிம்நப்ரஸந்நசீதாசய மக்நநாதா:* என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகத்திலும் விசதம்.

## அரங்கனைத் தாமரைத்தடாகமாக அநுபவித்தல்

**57** தடாகத்தில் தாமரைப்பூக்கள் மிக்கிருக்கும். *கை வண்ணம் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தம் அடியுமஃதே* (திருநெடுந்தாண்டகம்—21) என்றபடியே திவ்யாவயவங்களாகிற தாமரைப்பூக்கள்மிக்கிருப்பன் எம்பெருமான்.

**58** தடாகம் மத்ஸ்யங்கள் விஹரிக்கப்பெற்றிருக்கும். எம்பெருமானும் திருக்கண்களாகிற மத்ஸ்யங்கள் பொலிய நிற்பன். "ஸ்புரித சபரத்வந்த்வ லலிதே—நயநாப்ஜே" (ஸ்தவே 99) என்கிற ச்லோகரத்நம் இங்கு அநுஸந்தேயம்.

**59** தடாகம் தாமரையிலைகளைக் கொண்டிருக்கும். எம்பெருமானும் *அக் கமலத்திலை போலும் திருமேனியடிகளுக்கே* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின் படி தாமரையிலை யென்னலாம்படியான திருமேனியைக் கொண்டிருப்பன்.

**60** தடாகம் தாபதப்தர்களின் தாபங்களை ஹரிக்கும். எம்பெருமான் ஸம்ஸாரமருகாந்தாரத்தில் சுற்றிச் சுழன்றலைந்து தாபத்ரய தப்தரானுருடைய ஸகலதாபங்களையும் ஸவாஸநமாக ஹரிப்பன்.

**61** தடாகம் தன்னுள் இறங்குவதற்குப் பல படிகளையும் பலவான துறைகளையுமுடைத்தாயிருக்கும். எம்பெருமானும் தன்னிடம் அவகாஹிப்பதற்கு கர்ம யோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகம் ப்ரபத்தியோகம் ஆசார்யாபிமானம் என்னும் படியான பல படிகளையும், த்யாநம் யஜநம் அர்ச்சநம் ஸங்கீர்த்தனம் ப்ரணமம் ப்ரதக்ஷிணம் என்னும்படியான பலதுறைகளையுமுடையனுவன்.

**62** தடாகம் தண்ணீர் நிரம்பப் பெற்றிருக்கும். எம்பெருமான் கருணாரஸ பரிபூர்ணனுயிருப்பன்.

**63** 'தடாகம் வேறு, தீர்த்தம் வேறு' என்று பிரிக்கவொண்ணுமே தீர்த்தமேயாயிருக்கும் தடாகம்; எம்பெருமானும் *ரஸோ வை ஸ:, ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி* என்கிற உபநிஷத்தின்படியே ரஸஸ்வரூபனுயிருப்பன்.

**64** தடாகம் தன்னில் துறைதப்பியிழிந்தவர்களை ஜீவித மிழக்கப் பண்ணும். எம்பெருமானும் *காலை நன்ஞானத்துறைபடிந்தாடி* என்கிற திருவிருத்தப் பாசுரப் படியே ஸதாசார்யர்கள் வழியாகத் தன்பால் அவகாஹியாதவர்களுக்கு விநாசநமே பலிக்கச் செய்வன்.

**65** பெரிய தடாகம் மேன்மேலும் அலைவரிசைகள் பரம்பப்பெறும். எம்பெருமானும் *புஜவீசிவ்யாகுலே என்கிற முகுந்தமாலையின்படியே, ஆனந்த பரவசனுய் மெய்யடியார்களைத் தழுவிக்கொள்ளத் *தோள்களாயிரத்தாய்* என்கிறபடியே சதசாகசமாகப் பணைக்கும் திருத்தோள்களையுடையனுயிருப்பன்.

**66** தடாகம் பலர் வாழவும், சிலர் கழுத்திலே கல்லைக் கட்டிக்கொண்டு விழுந்து முடியவுமிடமாயிருக்கும்; *வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதக மணித்தடம்* என்ற திருவாய்மொழியின்படியே *நல்லவமரர் பொலிவெய்தவும் வல்லரக்கருமசுரரும் புக்கழுந்தவும் நிலமாயிருப்பன் எம்பெருமான்.

**67** தடாகம் ஸ்நாநம் பானம் அநுஷ்டானம் முதலான பல செய்கைகளுக்கு உதவும். எம்பெருமான் 'வாக்கினால் கருமந்தன்னால் மனத்தினால் சிரத்தை தன்னால் வேட்கைமீதூர வாங்கி விழுங்கினேற்கினியவாறே* (திருக்குறுந்தாண்டகம் 4) என்கிறபடியே பலவகை யநுபவங்களுக்கும் உரியனாயிருப்பன்.

## அரங்கனைக் கடலாக அநுபவித்தல்

**68** கடல் 'முந்நீர்' எனப்படும். ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் என்னப் படுகிற மூன்று வகைப்பட்ட நீரையுடையது கடல் என்றபடி. எம்பெருமானும் நீர் போன்ற கருணாரஸம் மூன்று வகையாக இருக்கப் பெற்றவன்; இயற்கையான இன்னருள், பிறர்படுந் துய்ரத்தைக் கண்டு தோன்றுகின்ற அருள். பிராட்டியின் புருஷகாரத்தாலே தோற்றுவிக்கப்பட்ட அருள் என மூவகைப்படும் பகவானது கருணாரஸம்.

**69** கடல் சிறுமீன் முதலாகத் திமிங்கிலம் வரையிலும், கிளிஞ்சல் முதலாக மணி மாணிக்கம் வரையிலும் அதம உத்தம விபாகமில்லாமல் அனைத்துக்கும் தன் பக்கல் இடங்கொடுத்திருக்கும். எம்பெருமானும் "சிவனொடு பிரமன் வண்திருமடந்தை சேர் திருவாகம்" "ஏறாளுமிறையோனுந் திசைமுகனுந் திருமகளும், கூறாளுந் தனியுடம்பன்" *பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே" இத்யாதிப்படியே ஸர்வாச்ரயபூதனாயிருப்பன்.

**70** கடல் தேவர்களுக்குச் சாவாமருந்தான அமுதத்தைச் சுரந்தளித்தது. எம்பெருமானும் "உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்" "தன்னைப் பெற்றேற்குத் தன்வாயமுதம் தந்து என்னைத் தளிர்ப்பிக்கின்றான்" என்னும்படியே பேரன்புடையார்க்குச் சாவா மருந்தான வாயமுதத்தை யளிக்குமவன்.

**71** கடல் அளவிட முடியாத ஆழமுடையது; "ஸமுத்ர இவ காம்பீர்யே" என்கிறபடியே எம்பெருமானது கம்பீரத் தன்மையும் பாசுரமிட்டுப் பேச வொண்ணாதது. *கொள்ளமாளா வின்ப வெள்ளமாகையாலே இதிலே யிழிவார்க்கு உள்ளாழம் காண்பரிது.

**72** கடல் தன்பக்கலுள்ளதை மேகங்களுக்குக் கொடுப்பதுஞ் செய்யும்: மேகம் பெய்யும் நீரைத் தான் வாங்கிக்கொள்வதுஞ் செய்யும்; எம்பெருமானும் "அர்த்தி தார்த்த பரிதாந தீக்ஷிதம்" "ஸகல பலப்ரதோஹி விஷ்ணு:" என்கிறபடியே கொடுக்கவும் வல்லவன்; "கரோமி யத் யத் ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி ஸமர்ப்பயாமி" என்று கொடுப்பார் கொடுப்பவற்றைக் கொள்ளவும் வல்லவன். *தத் குருஷ்வ மதர்ப்பணம்* என்று தானும் சொல்லா நின்றான்.

**73** கடல் மழைநீர் தன்னிடத்து விழப்பெற்றாலும் அதனால் ஒரு அதிசயமும் உண்டாகப்பெறாது; "வர்ஷபிந்தோரிவ அப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாபோ ந து கபளநத:" என்கிறபடியே பெய்யும் முகிலுக்கு ஆத்ம லாபமே யத்தனை. அதுபோல

எம்பெருமானுக்கு நாம் எவ்வளவு ஸமர்ப்பித்தாலும் அதனால் நாம் க்ருதார்த்தர்களாவது தவிர பகவானுக்குப் புதிதாகச் செல்வ நிறைவு ஒன்றுமில்லை.

**74** கடல்நீர் நம்போல்வார் வாயில் புகமாட்டாது கசக்கும்; ஆனாலும் (பாதுகா ஸஹஸ்ரே) "ஆசாந்தஸிந்தோ: கும்பீஸூநோ": என்றபடியே குறு முனிவனுக்கு உணவாயிற்று; எம்பெருமானும் *தோன்றல் வாளரக்கன் கெடத்தோன்றின நஞ்சினை* என்கிறபடியே ஆஸுர ப்ரக்ருதிகளுக்கு விஷமாயிருந்தாலும் சுவையறிவார்க்கு "அமுதிலுமாற்ற வினியன்" "எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ்சோலைக் கோனேயாகி" என்னும்படி பரமபோக்யனுவன்.

**75** கடல்நீர் மாமுகிலின் வாய்வழியாக வந்தாலன்றி ஆர்க்கும் உபஜீவிக்க வொண்ணுது; எம்பெருமானும் ஆழ்வாராசார்யர்களின் திருவாய் வழியாகவந்தாலன்றி உபஜீவிக்கலாகான். இவ்விடத்தில் "லக்ஷ்மீ நாதாக்ய ஸிந்தௌ சடரிபு ஜலத: ப்ராப்ய காருண்ய நீரம் நாதாத்ரௌ அப்யஷிஞ்சத்" என்கிற ச்லோகத்தின் விரிவான பொருளும் "மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடற்சொல் இவர்வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தியின் சீரிய பொருளும் அநுஸந்தேயம்

**76** நாமெல்லாரும் கடலின் கரையிலே நிற்கவேண்டுமே யல்லது உள்ளே புக முடியாது; நிலவர்களே உட்புகுந்து ரத்னங்களைத் திரட்டிக் கொணர்வர்கள். அது போலே பகவத் விஷயத்திலே நாமெல்லாம் மேலெழ நிற்க. நம்பிள்ளை போலும் மஹான்களே ஆழ அவகாஹித்து வேதார்த்தநிதிகளைவாரிக்கொணர்ந்துகொடுப்பர்கள்.

**77** கடல் விஷத்தையும் தந்தது. அமுதத்தையுமளித்தது; எம்பெருமானும் *பயக்ருத் பயநாசந:* என்கிறபடியே பயத்தையும் விளைவிப்பன், பய நாசமும் பண்ணித் தருவன்.

**78** கடலுக்கு ஒரு பக்கத்தில் வரவுகளும் ஒரு பக்கத்தில் செலவுகளுமாயிருக்கும்; [பல நதிகள் வந்து சேர்வது வரவு; மேகங்கள் நீர்முகந்துகொண்டு போவது செலவு.] எம்பெருமானுக்கும் அர்ச்சாவதாரங்களில் இங்ஙனேயாயிருக்கும். ஆலயங்களில் உண்டியில் வரவுமுண்டு; பலவகைச் செலவுமுண்டு.

**79** "அப்திர் லங்கித ஏவ வாநரபடை: கிந்து அஸ்ய கம்பீரதாம் ஆபாதாள நிமக்ந பீவரதநுர் ஜாநாதி மந்தாசல:" (முராரி என்கிறபடியே வாநர வீரர்கள் கடலைக் கடந்து விட்டாலும் அவர்களுக்கு உள்ளாழம் தெரியாது; அடிவரையில் அழுந்தின மந்தர கிரிக்கே அந்த ஆழம் தெரியும்; அதுபோலவே எம்பெருமான் விஷயத்தில் நாமெல்லாம் கவிகள் இயற்றித் துதிசெய்து விட்டாலும் அவன்படிகளை நாம் சிறிதுமறியோம்; ஆழ்வார்கள் என்று திருநாமம் பெற்று அவ்விஷயத்தில் ஆழமூழ்கியிருக்கும் மஹான்களே ஆழமறிவர்கள். "பாலிற் கிடந்ததுவும் பண்டரங்கமேயதுவும், ஆலில் துயின்றதுவும் ஆரறிவார்—ஞாலத்தொரு பொருளை வானவர் தம் மெய்ப்பொருளை, அப்பிலரு பொருளை யானறிந்த வாறு" என்று அருளிச் செய்தார் திருமழிசைப்பிரான்.

**80** கடல் கலங்காது; கலங்கினாலும் ஒரு நொடிப்பொழுதில் தானே தெளிவு பெறும்; தண்ணளியே வடிவெடுத்த எம்பிரானும் சீற்றங் கொள்ளமாட்டான்; ஔபா

திகமாகச் சீறினாலும் அடுத்த க்ஷணத்திலே அநுக்ரஹம் பொங்கி நிற்பன்; "மா வாலி பதமந்வகா:" என்னும்படி ஸுக்ரீவ மஹாராஜர் பக்கலிலும் "ஸாகரம் சோஷயிஷ்யாமி" என்னும்படி ஸமுத்ரராஜன் பக்கலிலும் அளவு கடந்து சீறிச் சிவந்த இராம பிரான் அடுத்த க்ஷணத்திலே அருள் பொலிய நின்றமை காண்க.

**81** கடல் கடக்க அரிதாயினும் நாவாயினால் எளிதாகக் கடக்கலாகும். "பாதாம்போஜே வரத பவதோ பக்தி நாவம் ப்ரயச்ச" (முகுந்தமாலை) என்கிறபடியே பக்தியாகிற நாவாயைப் பெற்றால் எம்பெருமானாகிற கடலையும் எளிதாகக் கடந்து விடலாம். *பத்துடையடியவர்க்கு எளியவன்.

**82** கடலருகேயிருந்தாலும் விடாய் தீர்த்துக்கொள்ள வேறொரு நீர்நிலை தேட்டமாகும். சாஸ்த்ரங்களால் எம்பெருமானை எவ்வளவு அநுபவித்தாலும் அர்ச்சையிலிழிந்தாலன்றி ஆர்த்திசாந்தியில்லையாம்.

**83** எவ்வளவு காரிய நிர்ப்பந்தங்களிருந்தாலும் பெருஞ் செல்வர்கள் சிறிது போதாவது கடற்கரை சாராதிரார்கள்; அதுபோலவே பல காரியங்களையும் சுருக்கிக் கொண்டு தினப்படி ஒரு நாழிகைப் பொழுதாவது பகவத் கதையிலும் பகவத ஸேவையிலும் அந்வயியாதிருக்கலாகாது.

## அரங்கனைப் பச்சைமாமலையாக அநுபவித்தல்

**84** நம்மாழ்வார் திருவாய்மொழியில் *நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே! வாவென்று கூவும்* என்றருளிச் செய்துள்ளார். இதனால் மலையைக் கண்டவாறே நெடுமாலென்கிற ப்ரதிபத்தி யுண்டாகுமென்பதறிந்தோம். இங்கே ஈட்டில் பிள்ளானுடைய நிர்வாஹமொன்றும் நஞ்சீயருடைய நிர்வாஹமொன்றும் காட்டப்பட்டுள்ளது. "வடிவில் பெருமையைக் கண்டவாறே ஜகத்தை யடையத் தன் திருவடிகளின் கீழேயிட்டுக்கொள்ளும்படி பெரியவடிவையுடையனாய்த் திருவுலகளந்தருளின ஸர்வேச்வரன் என்று நினைத்து இங்ஙனே வாராயோவென்றழைக்கும்" என்று பிள்ளான் நிர்வாஹம். "மலை பேரமாட்டாதே, பலகால் வர்ஷிக்கையாலே அழுக்கற்றுப் பசுகு பசுகென்றிருக்குமே; அத்தைக்கண்டு அவன் ஸாபராதனாகையாலே லஜ்ஜித்து வந்து கிட்டமாட்டாமையாலே பச்சைப்பிடாத்தையிட்டு முட்டாக்கிட்டு லஜ்ஜிக்கிறானென்று ......உமக்கு லஜ்ஜிக்க வேண்டுவதுண்டோ? இங்ஙனே போரீர் என்னாநின்றாள்" என்று நஞ்சீயர் நிர்வாஹம்.

## அரங்கனை மத்யானையாக அநுபவித்தல்

**85** ஸ்ரீரங்கநாதனை பட்டர் *ரங்ககுஞ்ஜர* என்று யானையாக அநுபவித்தார். அதற்குள்ள பொருத்தங்கள் கேண்மின். ஆனையின் மீது ஏறவேண்டியவன் யானையின் காலைப் பற்றியே ஏறவேண்டும்; எம்பெருமானிடஞ் சென்றுசேரவேண்டியவர்களும் அவனது திருவடியையே பற்றிச் சேர வேண்டும். *உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே.

**86** ஆனை தன்னைக் கட்டத் தானே கயிறு எடுத்துக்கொடுக்கும்; 'எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால்" (திருச்சந்தவிருத்தம்) என்கிறபடியே எம்பெருமானைக் கட்டுப்படுத்தும் பக்தியாகிற கயிற்றை அவன் தானே தந்தருள்வன்; 'மதிநலமருளினன்". *பகவந் பக்திமபி ப்ரயச்ச மே.

**87** யானையை நீராட்டினால் அடுத்த க்ஷணத்திலே அழுக்கோடே சேரும்; எம்பெருமான் சுத்த ஸத்வமயனாய் பரமபவித்திரனாயிருக்கச் செய்தேயும் *பொய்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பு முடைய நம்போல்வாரோடே சேரத் திருவுள்ளமாயிருப்பன் வாத்ஸல்யத்தாலே. *ஸ்வம் ஸம்ஸ்க்ருத த்ராவிட வேத ஸூக்தைர் பாந்தம் மதுக்தைர் மலிநீகரோதி, ஸ்ரீரங்க கர்ர: கலபம், க ஏவ ஸ்நாத்வாபி துளீரஸிகம் நிஷேத்தா* என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகத்தை அநுஸந்திப்பது.

## மதுரேண ஸமாபயே

ஸ்ரீரங்கவாஸிமதுராந்தகபண்டிதஸ்ய வைதண்டிகஸ்ய விபரீதவசாம்ஸி வீக்ஷ்ய,
ஸோகாதுராந் புதவராந் முதிதாந்தரங்காந் குர்வே யதார்த்தவிஷயாந் விநிவேத்ய

**திருக்கச்சிநம்பி வைபவ பரிஷ்காரம்** [ஸத்ய:

**88** *ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:, ஸர்வவர்ணேஷு தே சூத்ரா யே ஹ்யபக்தா ஜநார்தநே *ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்தி விஹீநஸ் து யதிச்ச ச்வபசாதம:* என்பது முதலான பல ப்ரமாணங்கள் வர்ணாச்ரமங்களில் சரக்கறுத்து பகவத் ஸம்பந்தத்தையே உத்கர்ஷ ஹேதுவாகச் சொல்லியுள்ளன. *பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்* என்கிற பகவத் வசனத்தைத் தொண்டரடிப் பொடியாழ்வார் *இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின் கொண்மினென்று நின்னோடு மொக்க வழிபட வருளினாய்* என்கிற பாசுரத்தாலே நிரூபித்தருளினார். இங்ஙனே யுள்ள பல்லாயிரம் பிரமாணங்களினால் உத்க்ருஷ்ட நிக்ருஷ்ட ஜன்மம் இன்னதென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்குமதை ஸ்ரீவசனபூஷணம் ஆசார்ய ஹ்ருதயம் முதலான திவ்ய க்ரந்தங்களில் நம் ஆசாரியர்கள் பரக்க அருளிச் செய்துள்ளார்கள். ஆழ்வார்களில் சிலர் தாழ்ந்த வருணங்களில் அவதரித்திருப்பதனால் அவர்கள் பக்கலில் ஜாதிப்ரயுக்தமான நிகர்ஷம் பாராட்டலாகாது என்பதற்காகவே இவ்விஷயம் ரஹஸ்ய நூல்களில் நிரூபிக்கப்பட்டுள்ளது. போலியான பக்தியை அபிநயித்து பாகவதனென்றும் பக்தனென்றும் பேர் சுமக்கின்ற இக்காலத்தவர்களைப்பற்றி இந்த உத்க்ருஷ்டஜன்ம ப்ரபாவ விஷயம் ஸர்வாத்மநா அப்ரஸக்தம். *கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்* என்கிற பிரமாணத்திற்கு இலக்கான மஹநீயர்களைப் பற்றியே உத்க்ருஷ்ட ஜந்மநிருபணம் ரஹஸ்ய க்ரந்தங்களில் அமைந்தது.

அஸங்குசித ஹ்ருதயர்களான ஆசாரியர்கள் சாஸ்த்ரார்த்தங்களை உள்ளபடி நிரூபித்தருளக் கடமைப்பட்டவர்களாதலால் இந்த நிரூபணங்களைப் பண்ணிப் போந்தார்கள். நிரூபணஸாரம் கேண்மின்;—

உலகத்தில் அவரவர்கள் நமக்குப் பெருமையுண்டென்று நினைப்பதற்குப் பல ஹேதுக்களுள்ளன. உயர்ந்த ஜாதியிலே பிறந்திருக்கின்றோமென்று சிலர் பெருமை கருதுவர். உயர்ந்த ஆச்ரமத்தில் இருக்கின்றோமென்று [ஸந்ந்யாஸாச்ரமம் பூண்டு

யதியாயிருக்கின்றோமென்று] சிலர் பெருமை பாராட்டுவர். தர்க்க வ்யாகரண மீமாம்ஸைகள் முதலான சாஸ்த்ரங்களில் விசேஷபாண்டித்யம் படைத்திருக்கிறோமென்று சிலர் பெருமை கொள்வர். வேதவிதிகளைத் தவறாது ஸ்நாந ஸந்த்யாவந்தனம் முதலான நித்யநைமித்திக ஆசாரங்களில் வழுவாதிருக்கின்றோமென்று சிலர் தம்மைப் பெரியோராக நினைத்திருப்பர்கள். இப்படி அவரவர்கள் தாங்கள் நினைத்திருப்பதேயன்றி இக்காரணங்கள் பற்றி அவர்களைப் பெருமைவாய்ந்தவராக இதரர்கள் பலரும் நினைத்திருப்பதுமுண்டு; சொல்லுவதுமுண்டு. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலே ஆத்மாவுக்கு நிரூபகமென்று நிஷ்கர்ஷித்து அறிதற்குத் தகுதியாக த்யாஜ்யோபாதேயங்களைப் பகுத்துணரத்தக்க ஞானமில்லாதவர்களே இங்ஙனம் நினைத்திருப்பர்களென்றும், அப்படிப்பட்ட ஞானமுள்ளவர்கள் கீழ்ச்சொன்ன காரணங்களினால் மாத்திரம் ஒரு பெருமை கருதார்கள், பகவத் ஸம்பந்தமொன்றைக்கொண்டே பெருமையை நிஷ்கர்ஷிப்பர்களென்றும் நம் ஆசாரியர்கள் அறுதியிட்டுள்ளார்கள்.

இவ்விஷயங்களுக்கு அடைவே ப்ரமாணங்கள் காட்டப்படுகின்றன; [*சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் ந விந்ததி, வேதபாரபராக்ராந்தஸ் ஸ வை ப்ராஹ்மண கர்தப:*] நான்கு வேதங்களையும் அதிகரித்துவைத்தே வேதமுழுப்பொருளாகிய எம்பெருமானை அறியப்பெறாதவன் குங்குமஞ் சுமந்த கழுதைபோலே தான் சுமந்து கொண்டு திரிகிற வேதத்தின் பரிமளமறியாத பிராமணக் கழுதையென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகவே வெறும் பிராமண ஜாதிப் பிறப்பைக் கொண்டே பெருமை பாராட்டலாகாதென்பது விளங்கிற்று *ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்தி விஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம* சண்டாள யோனியிற் பிறந்தானாயினும் விஷ்ணு பக்தியுடையனா யிருந்தால் அவன் கேவல ப்ராஹ்மணனிற் காட்டிலும் சிறந்தவன்; உத்தமாச்ரமியானாலும் எம்பெருமானிடத்தில் பக்தியில்லாதவன் சண்டாளனிற் காட்டிலும் தண்ணியன் என்று இதனால் சொல்லிற்று. ஆகவே வெறும் ஸந்ந்யாஸாச்ரமத்தைக் கொண்டே பெருமை கருதலாகாதென்று விளங்கிற்று. *தத் கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே, ஆயாஸாயாபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம்* மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும்; அப்படியல்லாதது செருப்புக்குத்தக் கற்ற கல்வி போன்றதேயாகும் என்று இதனால் சொல்லிற்று. ஆகவே தர்க்கபாண்டித்யத்தைக்கொண்டே பெருமை பாவிக்கலாகாதென்பது விளங்கிற்று.

ஜாதியினால் ஏற்றமும், ஆச்ரமத்தினால் உயர்வும், கல்வியினால் சிறப்பும், ஒழுக்கத்தினால் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ் செல்வமில்லாதபோது சிறிதும் பயன்படாதென்பது ஸகலசாஸ்த்ர ஸாரமானது. இவ்வர்த்த விசேஷங்களை ஸ்ரீவசநபூஷணமும் ஆசார்ய ஹ்ருதயமும் பரக்கப்பேசியுள்ளன. இவ்வர்த்த விஷயமான விவாதம் ஸம்பிரதாயத்தில் ஒரு பெரிய விஷயமாக வுள்ளது. சாஸ்த்ரார்த்த தத்வமிருக்கும்படியை நாம் கீழே ப்ரமாண பூர்வகமாகக் காட்டியாயிற்று. இந்த ப்ரமாணங்களில் எவர்க்கும் விப்ரதிபத்தி இராது. ஆனாலும் வர்ணாச்ரம வ்யவஸ்தையை மீறி இதர வர்ணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ ஏலாது என்னுமபிஸந்தியினால் இவ்வர்த்தத்தில் வாத விவாதங்களைப் பிறர் செய்கிறார்கள். அவற்றை அநுவாதஞ்

செய்து மறுப்பெழுத நாம் இங்கு விரும்புகின்றிலோம். ஏனென்னில், இது அனுஷ்டானத்திற்கு உபயோகப்படாத விஷயமாக இராநின்றது. இக்காலத்தில் இதர வருணத்தவர்கள் யோக்யதை மிகுந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் திறத்திலே நாம்எங்ஙனம் நடந்து கொள்ளுகிறோமென்பது அனைவர்க்கும் அபரோக்ஷம். இவ்வர்த்த விசேஷங்களைச் சோதிக்கின்ற நாமும், இவற்றை க்ஷேபிக்கின்ற பிறரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கே யிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தம் ஆனால் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூருவர்கள் அவசியமாக எழுதி வைத்தது எதற்காக வென்றால், அவர்களுடைய காலத்திலும் பண்டைக் காலத்திலும் இருந்த லோகாதீத பரம விலக்ஷண பரமபக்த சிகாமணிகளைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்ததாகும்

இக்காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவ தோத்தமர்கள் *க்வசித் க்வசித்* என்றபடியே ஒரோவிடங்களிலே தோன்றுகை அஸம்பாவித மன்று. அன்னவர் திறத்திலே நாம் ப்ரதிபத்தி குன்றாமேயிருக்கவேணு மென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். ஆகவே ஈண்டு இதில் விசேஷித்து விளக்கவேண்டிய அவசியமில்லை யெனினும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷ ஸரணியில் ஒரு விஷயம் மாத்திரம் இங்கு நன்கு தெளிவிக்க வேண்டியதாகவுள்ளது. அவ்விஷயம் யாதெனில்; இந்த ஜந்மோத்கர்ஷ விசாரத்தில், ஜாதி நசிக்கு மென்று நம் ஆசார்யர்கள் அருளிச் செய்து போந்தார்கள். "க்ஷத்ரியனான விச்வாமித்ரன் ப்ரஹ்மரிஷியானான்" இத்யாதி ஸ்ரீஸூக்திகளும் ஸ்ரீவசந பூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் விளங்குமவை. இவற்றுக்கு மறுப்பாக ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்தில் சில எழுதியுள்ளதனால் அவை எவ்வளவு பொருந்துமென்பது இங்குச் சிறிது விமர்சிக்கப் படுகின்றது. *"சருவ்யத்யாஸாதிகளான சில விசேஷ நிதாநங்களாலே வருகிற விச்வாமித்ராதிகளுடைய நிலை வேறு சிலர்க்குக் கூடுமென்கை வசந விருத்தம்" என்பது ரஹஸ்யத்ரயஸாரத்திலுள்ளது. இங்குத் தெளிமின். ஸ்ரீராமாயணத்தில் பாலகாண்டத்தில் ஐம்பத்தாறும் ஸர்க்கத்திலே *க்ஷத்ரபந்தோ! ஸ்திதோஸ்ம்யேஷ யத் பலம் தத் விதர்சய நாசயாம்யத்ய தே தர்ப்பம் சஸ்த்ரஸ்ய தவ காதிஜ!* என்றும் *க்வச தே க்ஷத்ரியபலம்* என்றும் *பச்ய ப்ரஹ்மபலம் திவ்யம் மம க்ஷத்ரிய பாம்ஸந!* என்று மிப்படி பல விடங்களிலும் ஸ்ரீவஸிஷ்ட பகவான் விச்வாமித்ரனை க்ஷத்ரியனாகவே சொல்லிப் போந்தான். விச்வாமித்ரன் தானும் *திக் பலம் க்ஷத்ரிய பலம் ப்ரஹ்மதேஜோ பலம் பலம்* என்று தன்னை க்ஷத்ரியனாகவே சொல்லிக்கொண்டான். அன்றியும் *தபோ மஹத் ஸமாஸ்தாஸ்யே யத்வை ப்ரஹ்மத்வகாரணம்*என்று ப்ராஹ்மண்யப்ராப்திக்கு உறுப்பாகத் தவம்புரியப் போகிறேனென்று சொல்லிக்கொண்டு தபஸ்ஸிலே ப்ரவர்த்திக்கையாலே அதுக்கு முன்னே சருவ்யத்யாஸாதி நிபந்தநமான ப்ராஹ்மண்யம் அவனுக்குண்டாயிருந்ததென்கை ஸ்ரீராமாயணத்தோடு சேருவது அரிது.

ஸஹஸ்ரநாம பாஷ்யமருளிச் செய்யாநின்ற பட்டரும் உபோத்காதத்திலே *ஸ்வவசநேந க்ஷத்ரியம் விச்வாமித்ரம் ப்ராஹ்மணீக்ருதவதோ பகவதோ வ்ஸிஷ்டஸ்ய* என்று க்ஷத்ரியனான விச்வாமித்ரனை ஸ்வவசனத்தாலே ப்ரஹ்ம ரிஷியாக்கினதை யன்றோ வஸிஷ்ட பகவானுக்கு ஏற்றமாக அருளிச்செய்தது. இங்ஙனன்றிக்கே விச்வாமித்ரனுக்கு ப்ராஹ்மண்யம் ஜந்மஸித்தமாயிருந்தால் பட்டர் இப்படி யருளிச் செய்யக் கூடாதே. தபோமூலகமான வஸிஷ்ட வாக்யத்தாலே ப்ராஹ்மண்யம் இடை

யில் வந்தது என்று ஸ்ரீராமாயணத்தில் தேறிநின்ற பொருளையன்றோ பட்டர் இங்ஙனே அநுவதித்தருளிச் செய்தது.

இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத் தக்கதொரு ப்ரமாணமுண்டு *அந்ருஷ்யாநந்தர்யே பிதாதிப்யோஞ்* (4-1-104) என்கிற வியாகரண ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் *அந்ருஷ்யாநந்தர்ய இத்யுச்யதே; தத்ரேதம் ந ஸித்த்யதி—கௌசிகோ விச்வாமித்ர இதி-கிம் காரணம்? விச்வாமித்ரஸ் தபஸ் தேபே நாந்ருஷிஸ் ஸ்யாமிதி. தத்ரபவாந் ருஷிஸ்ஸம்பந்ந: ஸ புநஸ்தபஸ்தேபே—நாந்ருஷே: புத்ரஸ்ஸ்யாமிதி. தத்ரபவாந் காதிரபி ருஷிஸ்ஸம்பந்ந:. ஸ புநஸ் தபஸ் தேபே நாந்ருஷே: பௌத்ரஸ்ஸ்யாமிதி; தத்ரபவாந் குசிகோऽபி ருஷிஸ் ஸம்பந்ந:* என்று விச்வாமித்ரன் தன் தவ வலிமையினால் தானும் தன் பிதாவும் தன் பிதாமஹனும் ரிஷித்வத்தை யடைந்தானென்று ஸுஸ்பஷ்டமாகப் பதஞ்சலி முனிவர் பணித்தார். காதிக்கும் குசிகர்க்கும் சருவ்யத்யாஸமானதுண்டோ?

இனி ஸ்ரீவிஷ்ணுபுராண வசனங்களையும் விமர்சிப்போம். அதில் (4—2—74) *அத வநாதாகத்ய ஸைத்யவதீமிருஷிரபச்யத்; அதிபாபே! கிமிதமகார்யம் பவத்யா க்ருதம்? அதிரௌத்ரம் தே வபுர் லக்ஷ்யதே நூநம் த்வயா த்வந்மாத்ருஸாத் க்ருதச் சருருபபு (யு) க்த: ந யுக்தமேதத் மயா ஹி தத்ர சரௌ ஸகலைச்வர்ய வீர்ய சௌர்ய பல ஸம்பதாரோபிதா! த்வதீய சராவபி அகிலசாந்தி ஜ்ஞானதிதிக்ஷாதி ப்ராஹ்மண குண ஸம்பத்; தச்ச விபரீதம் குர்வத்யாஸ்தவ அதிரௌத்ராஸ்த்ர தாரணபாலன நிஷ்ட: க்ஷத்ரியாசார: புத்ரோ பவிஷ்யதி, தஸ்யாச்ச உபசமருசி: ப்ராஹ்மணாசார இதி* என்றுள்ளது. இதனால் சருக்களுக்கு சௌர்யாதி குணாதிசயப்ரயோஜகத்வம் சொல்லிற்றித்தனையல்லது ப்ராஹ்மண்யாதிஜாதிப்ரயோஜகத்வம் சொல்லிற்றில்லையே. வீர்ய சௌர்ய பல ஸம்பதாரோபிதா என்றும் ப்ராஹ்மணகுண ஸம்பதாரோபிதா என்றுமன்றோ சொல்லிற்று. *க்ஷத்ரியாசார: புத்ரோ பவிஷ்யதி, ப்ராஹ்மணாசார:* என்றதேயொழிய *க்ஷத்ரிய: புத்ரோ பவிஷ்யதி. ப்ராஹ்மண: புத்ர:* என்றதில்லையே. ஆகவே சருவ்யத்யாஸம் ப்ராஹ்மண்யாதிஜாதிப்ரயோஜகமன்று. அன்று, அன்று.

இன்னமும், விச்வாமித்ரனுக்கு சருவ்யத்யாஸத்தாலே ப்ராஹ்மண்யம் முன்பே உண்டாயிருந்ததாகில் அவனுக்கு க்ஷத்ரிய கல்பத்தாலே முன்பு பண்ணின உபநயநாதிகள் சாஸ்த்ரீயமாகாமற் போகும். மேலும் இந்த சருவ்யத்யாஸத்தாலே பரசுராமனுக்கு க்ஷத்ரியத்வம் வரவேண்டுமாகையாலே அவனுக்கு ப்ராஹ்மண்யம் இல்லாமேபோம். ப்ராஹ்மண கல்பத்தாலே அவனுக்குப் பண்ணின உபநயநாதிகளும் அசாஸ்த்ரீயமாகும்.

இவற்றையெல்லாம் திருவுள்ளம்பற்றியே மணவாளமாமுனிகள் ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்திலே—*க்ஷத்ரிய குலோத்பவனான விச்வாமித்ரன் தஜ்ஜன்மத்திலே தான் பண்ணின தபோ விசேஷமடியாகவே வஸிஷ்ட வாக்யத்தாலே க்ஷத்ரியத்வம் பின்னாட்டாதபடி ப்ரஹ்ம ரிஷியாய் விட்டானிறே* என்றருளிச் செய்தார்.

தேவதாதிகரண ச்ருதப்ரகாசிகையிலே *பச்சாத் விச்வாமித்ரப்ரப்ருதீநாம் ச ப்ராஹ்மண்யாத்யபாவ ப்ரஸங்காத்* என்றுள்ளது. இதனால் விச்வாமித்ராதிகளுடைய

ப்ராஹ்மண்யாதிகள் பிறப்பே பிடித்தன்றிக்கே பின்பு வந்ததாக நிஸ்ஸந்தேஹமாய்க் காட்டப்பட்டது. இது இப்படியிருக்க. வீதஹவ்ய வ்ருத்தாந்த மொன்றுண்டு. அதாவது, வீதஹவ்யனென்பானொரு க்ஷத்ரியன் பகைவர்க்கு அஞ்சியோடிச் சென்று பரத்வாஜர் முதலிய மஹர்ஷிகளின் திரளிலே புக்கவளவிலே, அந்தப் பகைவர்கள் இந்தத் திரளருகே வந்து இங்கு க்ஷத்ரியனுளனோ? என்று கேட்டவாறே, அந்த மஹர்ஷிகள் சரணாகதனை சத்துருக்கள் கையிலே காட்டிக்கொடுக்கவொண்ணாதென்று "இங்குள்ளாரெல்லாரும் ப்ரஹ்மர்ஷிகளே" என்று சொல்லிவிட, அதனாலே வீதஹவ்யனுக்கு க்ஷத்ரியத்வம் கழிந்து ப்ராஹ்மண்யம் ப்ராப்தமாயிற்றென்று மஹாபாரதாதி ப்ரஸித்தம். இக்கதையை ரஹஸ்ய த்ரயஸார வியாக்கியானத்தில் [ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்தில் ஸாரவிவரணியில்] எழுதியுமுள்ளார்கள். இப்படி அல்ப சக்திகர்களான ரிஷிகளின் வாக்யத்தாலேயாம்போது, அதிகார ஸம்பத்து வாய்த்த அடியார்கள் திறமாக *நசூத்ரா பகவத்பக்தா: விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:* என்றாற்போலே ஸங்கல்பித்தருளினால் அங்ஙனேயாவதற்கு ஓர் இடையூறுண்டோ? *பகவத்பக்தி தீப்தாக்நி தக்த துர்ஜாதி கில்பிஷ:* என்ற ப்ரமாண கதியும் காண்க. ஜாதி நசிக்கமாட்டாதென்ற தேசிகர்தாமே *நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது* என்கிற ச்லோகத்திலே *சாபாயுத வதூத்ருஷ்த்தா துர்ஜாத ப்ரசமன பதாம்போஜ ரஜஸே* என்றும் *சிலாதேஸ் ஸ்த்ரீத்வாதிர் விபரிணதி ரஸ்த்வத்புத மிதம், ததோப்யேதச்சித்ரம் யுதுத தஹனஸ் யைவ ஹிமதா. என்றும் பணித்திருக்கக் காணா நின்றோம்.

இனி அடுத்த விஷயம். "பெரியவுடையார்க்குப் பெருமாள் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் பண்ணியருளினார்" என்று ஸ்ரீவசநபூஷணப் பாசுரம். இங்கு விவக்ஷிதமென்னவென்றால், லோகமர்யாதாஸ்தாபநார்த்தமாக அவதரித்துப் பித்ருவசந பரிபாலநாதிகளாலே ஸாமாந்ய தர்ம ஸ்தாபந சீலராயிருப்பாரான பெருமாள் பரமபக்தரான ஜடாயுவுக்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தைத் தாமே பண்ணியருளினாரென்று சொன்ன முகத்தால், ஜன்மாதிகளால் சிறந்தவர்கள் அவற்றால் குறைந்திருக்கும் விலக்ஷண பாகவத விஷயத்தில் புத்ரக்ருத்ய மநுஷ்டிக்கலாமென்பது காட்டப்பட்டது. 'இதை யடியொற்றியே மாறனேரி நம்பிக்குப் பெரிய நம்பி சரமக்ருத்யம் அநுஷ்டித்தவாறும் மேலே அருளிச் செய்யப்பட்டுள்ளது "தர்ம புத்ரர் அசரீரி வாக்யத்தையும் ஜ்ஞாநாதிக்யத்தையுங்கொண்டு ஸ்ரீ விதுரரை ப்ரஹ்ம மேதத்தாலே ஸம்ஸ்கரித்தார்" என்றும் அருளிச் செய்யப்பட்டுளது. இவ்விடங்களுக்கு மறுப்பெழுதா நின்ற தேசிகர் *துஷ்ணீம் அநுஷ்டிதமாதல், வ்யக்தி விசேஷநியத மாதலாமித்தனை* என்று (ரஹஸ்யத்ரயஸார ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில்) வரைந்தார். ஜடாயு ஸம்ஸ்காரத்தைப்பற்றி ஸ்ரீ ராமாயணத்திற் பேசும் பிரகரணத்தில் *யத்து ப்ரேதஸ்ய மர்த்யஸ்ய கதயந்தி த்விஜாதய: தத் ஸ்வர்ககமனம் தஸ்ய பித்ர்யம் ராமோ ஜஜாப ஹ* (ஆர. 98-34) என்று பெருமாள் மந்த்ரஜபம் பண்ணினபடியை வால்மீகி முனிவர்தாமே ஸுஸ்பஷ்டமாகச் சொல்லி வைக்கையாலே அங்கே தூஷ்ணீ மநுஷ்டாநவாதம் செல்லாது.

இனி, தர்மபுத்ரர் விதுரரை ஸம்ஸ்கரித்த விடத்திலாவது துஷ்ணீ மநுஷ்டாநவாதம் செல்லுமா? என்று பார்ப்போம். விதுரரை ஸம்ஸ்கரிக்க வேண்டிவந்தவளவில், அவருடைய ஜாதியைப் பார்ப்பதும் ஞானமிகுதியைப் பார்ப்பதுமாய் என் செய்வ

தென்று தரும புத்ரர் வியாகுலப் படுகிறபடியை மஹாபாரதம் சொல்லுகிற விடத்தில் *தர்மராஜஸ்து தத்ரைநம் ஸஞ்சிஷ்காரயிஷுஸ் ததா தக்துகாமோபவத்வித்வாந் என்று சொல்லிற்று. இதில் ததா என்றது சகாரார்த்தக மாகையாலே ஸஞ்சிஷ்காரயிஷுச்சாபவத்* என்றதாகிறது ஞானமிகுதிக்கீடாக யதாவத்தான ஸம்ஸ்காரம் பண்ணலாமா? என்று கலங்கி நின்ருனென்றபடி.

அதற்குமேல் என்னுயிற்றென்னில்; *[அதாகாசே வசோப்ரவீத் போபோ ராஜந்! ந தக்தவ்ய மேதத் விதுரஸம் ஜ்ஞகம் களேபர மிஹைதத்தே நைஷ தர்மஸ் ஸநாதன: லோக வைலக்ஷண்ஞோ நாம பவிஷ்யத்யஸ்ய பார்த்திவ! யதிதர்மமவாப்தோ ஸௌ நசோச பரதர்ஷப*] உடனே ஒரு ஆகாசவாணி உண்டாயிற்ரும். அது சொன்னபடி யென்னெனில் [ஏதந் ந தக்தவ்யம்] *தூஷ்ணீம் ந தக்தவ்ய மிதி யாவத்* இந்தத் திருமேனியை தூஷ்ணீம் தஹநம் பண்ணத்தகாது. [ஸநாதன ஏஷ தர்ம: தே லோக வைலக்ஷண்ஞோ ந பவிஷ்யதி] ப்ராசீநாசாரஸித்தமாய் தூஷ்ணீம் தஹநமன்றிக்கே ஸம்ஸ்கரிப்பதாகிற இந்த தர்மமானது உனக்கு சாஸ்த்ர விபரீதமாக மாட்டாதென்றபடி. இதுதனக்குக் காரணம் சொல்லுகிறது மேல் [யதிதர்ம மவாப்தோ ஸௌ] இவர் யதியைப்போலே ப்ரஹ்மமேதஸம்ஸ்காரார்ஹரேயொழிய தூஷ்ணீம் தஹிக்கத்தக்கவரல்லர் என்றபடி. [ந சோச] தூஷ்ணீம் தஹித்து விடுவதோ? ஸம்ஸ்கரிக்கக்கடவதோ வென்று கலங்கி சோகியாதே கொள் என்றபடி.

இங்கு [அஸௌ யதிதர்மம் அவாப்த:] என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கையாலே *புத்ரோ க்ருஹஸ்த: சுத்தோ2த யதேஸ் ஸம்ஸ்கார மாசரேத்* என்று தொடங்கி விதித்த ப்ரஹ்மமேதந தாஹஸம்ஸ்காரம் இவர்க்குச் செய்ய விதிக்கப்பட்ட தென்றதாயிற்று.

*யதிதர்மம் அவாப்தோஸௌ* என்று, வேறு வ்யக்திகளிடத்திலும் ஸம்பவிக்கக்கூடியதான தர்ம விசேஷத்தை ப்ரஹ்மமேத ஸம்ஸ்கார்யத்வ ப்ரயோஜகமாகச் சொல்லுகையாலே இத்தை 'வ்யக்தி விசேஷ நியதம்' என்னப் போகாது. யதிகளுக்கு தூஷ்ணீம் [அமந்த்ரகமாக] ஸம்ஸ்காரம் கண்டதில்லை மந்த்ராபவாத ப்ரமாணமுமில்லை. ஆகையாலே தூஷ்ணீம் அநுஷ்டித மென்னப் பொருந்தாது.

இனி, "ஸ்ரீ விதுரர்க்கு துர்யோதநன் சொன்ன ஜாதி விசேஷத்தை பகவான் இசைந்தானுயிற்று" என்று இதையொரு விஷயமாக எழுதியுள்ளார் அவர். அதாவது, கண்ணபிரான் விதுரர் திருமாளிகையிலே அமுது செய்து வந்தவாறே *கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷல போஜநம்*= கண்ணு! சூத்ரனுடைய சோற்றை ஏதுக்காக உண்டாய்? என்று துர்யோதநன் கேட்க, அதற்குக் கண்ணபிரான் 'விதுரர் சூத்ரரல்லர்' என்று பதில்சொல்ல வேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாமல் *த்விஷந்நம் ந போக்தவ்யம்—பாண்டவாந் த்விஷஸேராஜந்* இத்யாதியாலே வேறு பதில் சொல்லியிருக்கக் காண்கையாலே [துரியோதநனுடைய பேச்சை மறுத்துரையாமையாலே] கண்ணன் விதுரரை சூத்ரனுகவே இசைந்தானுயிற்றென்பது அவருடைய கருத்தாகின்றது. இதுவும் ஸமஞ்ஜஸமாகாது. துரியோதநனுடைய கேள்விக்குக் கண்ணபிரான் திருவுள்ளத்தாலே முக்கியமாகச் சொல்லவேண்டியதாகத் தோன்றின் பதில் எதுவோ அது அங்கு வெளிவந்திருக்கின்றது. 'துரியோதநா! நீ

என்னுயிர் நிலையிலே த்வேஷிக்கையாலே *யோ மே பக்தஜநம் த்வேஷ்டி தம் வித்யா தந்த்யரேதஸம்* என்கிறபடியே நீ அந்த்ய ரேதஸ்ஸாகையாலே உன்னைப் பரித்யஜித்தோம் என்று இங்ஙனே கண்ணன் கூறியுள்ள பதில்தான் அவசியமானது. அவன்னெஞ்சிலே தோற்றக்கூடிய பதில் இதுவேயாகையாலே இதைவிட்டு வேறு பதில் சொல்லும்படியான அசாதுர்யம் கண்ணனுக்கு எங்கிருந்து வரும்? *ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:* இத்யாதிகளாலே ஏற்கெனவே ஸித்தமான விஷயத்தை அங்குக் கண்ணன் எடுத்துரைக்கவேண்டிய அவசியமில்லாமையா லன்றோ அதைச்சொல்லாது விட்டது. அதனால், விதுரர் சூத்ரரேயென்று கண்ண பிரான் இசைந்ததாக எப்படியாய்விடும்? ஆகாது. இந்த ப்ரகரணத்தில் இங்ஙனே மற்றுஞ் சில விஷயங்களும் அபிநிவேச விஜ்ரும்பிதமாக எழுதப்பட்டிரா நின்றமை காண்க. "திரு ஸுரபியானாலும் கோத்வம் கழியாதிறே" என்றவாதமும் அஸ்தாநே. 'பகவத்பக்தா ந சூத்ரா:' என்று ஸ்பஷ்டமாக எடுத்துக் கழித்தாப்போலே 'தேவ ஸுரபி: ந கௌ:' என்று எங்கும் சொல்லாமையாலே.

அக்ஷரங்களில் ஶ—ஷ—ஸ—ஹ என்னுமிவை வடமொழிக்கே அஸாதாரண மானவை. இவ்வெழுத்துக்களை முற்கொண்ட பதங்களோடே (திரு) என்பதைச் சேர்த்தால் சிரிப்பர்கள். திரு ஹயக்ரீவர், திரு ஸாரநாதன், திரு ஶரண்யன்......... இப்படி சில அக்காளிப்பிச்சங்கள் ப்ரயோகிக்குமேயொழிய ஸ்வாமி தேசிகனு ப்ர யோகிப்பவர். மாடுகளுக்கு விரேசன முண்டானால் அதை **கழிதல்** என்றுதான் உலகர் சொல்லுவது. ஸுரபியாவது காமதேநு; காமதேனுவானாலும் அது ஜாதியில் கோவாகையாலே கோக்களுக்கு உண்டாகக்கூடியசழிதல் [விரேசனம்] அநிவார்யமே யாகும். ஆக, விரேசனமாகிற சழிதல் உண்டானால் அது வ்யக்திக்கு ஆகுமே யொழிய ஜாதிக்கு ஆகமாட்டதே; கோவ்யக்திக்கு விரேசன முண்டாகுமே யல்லது கோத்வஜாதிக்கு விரேசனமுண்டாகாது என்பதில் யார்க்கும் விவாதமில்லை. ஆகவே இது அப்ரஸக்த ப்ரதிஷேதம். இதை கவிதார்க்கிக கேஸரியான ஸ்வாமி ஒருகாலும் செய்தருளமாட்டார்; இதனாலும் அது தேசிக ஸூக்தியன்றேன்று பேரருளாள ஜீயர் பணிக்கும்படி. அஹல்யைக்கு ஸ்த்ரீத்வஜாதி எப்படி கழிந்தது? ஶிலாத்வ ஜாதி எப்படி வந்தது? ஶிலைக்கு ஶிலாத்வ ஜாதி எப்படி கழிந்தது? ஸ்த்ரீவ ஜாதி எப்படி வந்தது? "ஶிலாதே: ஸ்த்ரீத்வாதி:" (ரஹஸ்யத்ரயஸாரே) என்றதில இரண்டு ஆதி பதங்களுள்ளன; அவற்றால் க்ரஹிக்கப்படுமவை எவையோ? இது திஷ்டஹதமுத்க ராபிகாதமல்லவா?

ஸ்ரீ மதுராந்தக வித்வான் திருக்கச்சிநம்பிகளிடம் அபசாரப்பட வேணுமென்று கருதியே ***திருக்கச்சிநம்பி வைபவம்*** என்று மகுடமிட்டு ஜாதி விசாரத்தை வீணாகப் புகுத்திக்கொண்டு "தொண்டர்குலம் பெற்றாலும் ஜாதிமாறாது" என்றும், "நம்பிகள் பக்தாக்ரேஸரராயிருக்கச் செய்தேயும் ப்ராஹ்மண்யம் பெறவில்லையே" என்றும் எழுதிவிட்டு "இவ்வாறு திருக்கச்சி நம்பிகளுடைய பெருமையை இவ்வியா ஸம் மூலம் விண்ணப்பித்துக்கொண்டேன்" என்று நிகமித்திருக்கிறார். இவருடைய கருத்தால் இதுதான் திருக்கச்சிநம்பி வைபவம் போலும். "மதுராந்தகாசாரியர் ஏதோ சில புத்தகங்கள் வாசித்திருந்தாலும் ஐயோ! வ்யுத்பத்தியில்லையே!" என்று சிலர்

சொல்லிக்கொண்டிருப்பதுண்டு; அதுபோலவன்றோ இந்த வார்த்தையுள்ளது. திருக்கச்சிநம்பிகள் ப்ராஹ்மண்யம் பெற்று இவருடைய க்ருஹத்தில் நிமந்த்ரணத்திற்குவரவிருக்கிறார? நம்பிகளுக்கு ப்ராஹ்மண்ய முண்டாவென்று இவரை யாராவது கேட்டார்களா? *நைஷ்ரம் சிந்த்யம் குலாதிகம்* என்கிற ப்ரமாண வசனத்தை ஸ்வாமி தேசிகனும் உதாஹரித்தருளி யுள்ளார். அப்படியிருக்க, ஜாதிவிசாரம் செய்ய இவர் ஏதுக்குக் கை வைத்தார்? *தொண்டக் குலத்திலுள்ளீர்!* என்றழைத்த பெரியாழ்வார் *பண்டைக் குலத்தைத் தவிர்ந்து* என்றார் தவிர்ந்த பண்டைக்குலம் எதுவென்பதை இவர் அறிவரோ? ப்ராஹ்மண்யமில்லேயே யென்கிற இவரைக் கேட்கிறேம்; *விப்ரோ விப்ரத்வம் கச்சதே தத்வதர்சி* என்கிற வசனமறிவீரோ? அதன்பொருள் அறிவீரோ? பெரியாழ்வாரும் தொண்டரடிப்பொடியாழ்வாரும் ப்ராஹ்மண்யம் பெற்றிருந்து என்ன அதிசயம் பெற்றுவிட்டார்கள்? நம்மாழ்வாரும் திருப்பாணுழ்வாரும் என்ன சிறுமைபெற்று விட்டார்கள்? முநிவாஹநபோகத்தைப்பற்றி நாம் எழுதியிருந்தவற்றுக்கு இவர் என்ன விடை கூறினார்? அதை மீண்டும் நினைவூட்டுகிறேம்; விடையிறுத்து வீறு பெறலாமே. அதை நாம் முக்கியமாக எதிர்பார்க்கிறேம்.

இவர் எழுதிய வியாஸத்தில் முதல் வரியிலே "இம்மஹானுடைய" என்கிறர். இக்காலத்திலுள்ள லௌகிகப் பெரியார்களை ப்ரஸ்தாவிக்கையில் "இம்மஹான்" என்றும் "இம்மஹநீயர்" என்றும் எழுதுவதுண்டு *ராமாநுஜமுநேர்மாந்யமென்று புகழ் பெற்ற இப்பேராசிரியர் பக்கலில்இவருடைய ப்ரதிபத்தியின் திறம் அறியலாயிற்றன்றே.

ப்ரதமகபளே மக்ஷிகாபாத: = திருக்கச்சிநம்பிகளின் திருவவதாரஸ்தலத்தைப் பூந்தமல்லியென்றெழுதி ஏதோ விவரணம் செய்கிறர். திருவள்ளூர், தின்னனூர், திருப்பக்குழி... என்றிங்ஙனே சிலர் வழங்குமாபோலே பூந்தமல்லியென்றும் பூனமல்லியென்றும் சிலர் வழங்குவதை மட்டுமே யறிந்தவர் இவர். **பூந்த** என்கிறசொல் என்ன பாஷை யென்று வினவினுல் என்னுடைய பாஷையென்பர்போலும். *பூவிருந்தவல்லிமேய புனித நம்பி வாழியே* என்று நிச்சலும் வாழ்த்தப்படுகிற இந்த மஹாசார்யருடைய திருவவதார ஸ்தலத்தின் திருநாமம் பூவிருந்தவல்லியென்பதேயொழிய இவர் எழுதுகிறபடியன்று. பூவிருந்தவல்லித்தாயாரென்று அவ்விடத்து நாச்சியாருடைய திருநாமமும் ப்ரஸித்தம். *வானமாமலேயே! அடியேன் தொழவந்தருளே* என்கிற பாசுரப்படி எம்பெருமான் திருநாமமான வானமாமலே யென்பதையிட்டே அவ்வூரை வழங்குமாபோலே இங்கும் நாச்சியார் திருநாமத்தையிட்டே ஊரை வழங்கத் தொடங்கினர்களென்பதை இவர் இனியாவது அறியட்டும். இத்தகைய அபத்தங்கள் கிடக்கட்டும்.

இம்மஹான் தமது வியாஸத்தின் முடிவில் *தோஷைரேதை: குலக்நாநாம் வர்ணஸங்கரகாரகை:, உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாச் ச சாச்வத:* என்றான் கீதாசார்யன்" என்றெழுதியுள்ளார். அர்ஜுநஸஞ்ஜய—த்ருதராஷ்ட்ராதி வசனங்களையெல்லாம் கீதாசார்ய வசனமாகவே கொள்ளுகிற இவருடைய மருளுக்கு *நித்யஸ்ரீர் நித்யமங்களமென்று மங்களாசாஸனம் செய்து நிற்கிறேம். ... *

**திருக்கச்சிநம்பி வைபவ பரிஷ்காரம் முற்றிற்று.**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம: ஸ்ரீவாதிபீகர மஹாகுரவே நம:



# அடியேன் செய்யும் விண்ணப்பம்.

ஸகல பூர்வாசார்யர்களையும், அஸ்மதஸாதாரண ஆசாரியர்களையும் சிந்தனை செய்து கொண்டு—(விசேஷித்து) பூர்வாச்ரம மாதாமஹஜீயர் ஸ்வாமியையும், ஜகத் குரு ஸ்ரீமத் ப்ரதிவாதிபயங்கர. காதி. அனந்தாசார்ய ஸ்வாமியையும் சிந்தனை செய்து கொண்டு இந்த விஜ்ஞாபனம் செய்கிறேன். மேலே குறித்த மஹாசாரியர்களின் கருணைகடாக்ஷ வீக்ஷணமஹிமையினால் அடியேனுக்கு இருபது பிராயத்திற்குள்ளாகவே சென்னையில் பல பெரியார்களோடு நெருங்கின பழக்கம் உண்டாகியிருந்தது. அப்போது சென்னையில் பிரபல அட்வகேட்டாக இருந்த ஸ்ரீமதுபயவே ஸ்ரீரங்கம் T ரங்காசாரியர்ஸ்வாமியின் திருவருள் முதன்முதலாக விளைந்தது. அந்த ஸ்வாமி இன்றிரென்பதை இக்காலத்தில் பலர் அறியாமலிருக்கக்கூடும். இப்போது சென்னையில் மிகவும் ப்ரதிஷ்டிதராக எழுந்தருளியிருக்கும் பிரபல அட்வொகேட், ஸ்ரீமதுபயவே. V.N வெங்கடவரதாசாரியர் ஸ்வாமியின் மாமனார் அந்த T. ரங்காசரியர் ஸ்வாமி. அதேகாலத்தில் ஸ்ரீமதுபயவே. S. கோபாலஸ்வாமி ஐயங்காரென்பவரும் பிரபல அட்வகேட்டாக விளங்கிவந்தார். இன்னும் பல மஹநீயர்களை [R. சடகோபாசாரியர் ஸ்வாமி, ஸர். S. வரதாசாரியர் ஸ்வாமி. C.நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி, V.V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி, திருநாராயணையங்கார் ஸ்வாமிபோல்வாரையும்] இங்கே குறிப்பிடவேணும் வைதிகப் பெரியார்கள், வைச்யப்பெரியார்கள் பலரையும் குறிப்பிடவேணும். இத்தகைய மஹான்களில் ஒருவரும் இப்போது இல்லை. ஆயினும் அவரவர்களால் அடியேன் அடைந்த உபகாரம் அளவுகடந்ததாகையால் அப்பெரியார்களையெல்லாம் அடியேன் நினையாத நாளே கிடையாது. அந்த மஹான்களின் கருணைகடாக்ஷமாகவேஅடியேனுக்குச் சென்னைமாநகரின் தொடர்பு ஏற்பட்டது. அப்போது திருவல்லிக்கேணி முதலான விடங்களில் சிற்சில ஸந்தர்ப்பங்களில் உபந்யாஸம் செய்யும் வாய்ப்பு விளைந்தது. 1931. ஆம் வருஷத்தில்தான் சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில், பகவத்கதா ப்ரஸங்கஸபையென்று நெடுநாளாக ஸ்தாபிக்கப்பட்டிருந்ததொரு ஸபையில் அந்வயம் ஏற்பட்டு, சனி ஞாயிறு தோறும் மார்கழி முப்பதும், மற்றும் ஸமயவிசேஷங்களிலும் உபந்யாஸங்கள் நடத்தலாயிற்று. ஏறக்குறைய அறுபதுவருஷ நிகழ்ச்சியிது வென்னலாம்.





சில காரணங்களினால் தொண்ட மண்டலம் ஸ்கூல்ஹால்ஸபையின் ஸம்பந்தத்தைவிட்டு அகலநேர்ந்தபோது, சில மஹான்கள் ஸத்காலக்ஷேப ஸபையொன்று ஏற்படுத்தி அதன் மூலமாகக் காலக்ஷேபம் இடையருது நடந்துவரும்படி செய்தனர். ஸ்ரீமான் உவே. V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமி என்பவர் திருக்கண்ண புரத்தருகில் உபயவேதாந்தபுரத்தைச் சேர்ந்தவர். பிரபல அட்வகேட்டாக விளங்கினவர். இதோ இங்கே ஸேவைஸாதிக்கிருர் இப்பெரியார் புதிய ஸத்காலக்ஷேப ஸபைக்குப் பலவாண்டுகள் பிரஸிடெண்டாக விளங்கியவர். இவர் உபயவேதாந்தத்திலும் சிறந்தகேள்வியறிவுடையவராயிருந்தார். இந்த ஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளி ஏறக்குறைய இருபது வருஷமிருக்கும். அவர்க்குப் பிறகு ஷெ ஸத்காலக்ஷேப ஸபையை மிகமிக வளர்த்தவர்களும் இற்றைக்கும் வாழ்பவர்களுமான மஹான்களை அடுத்த பக்கத்தில் காண்மின்;

**முக்கியமான குறிப்பு;—** சென்னை புந்தர் தெருவில் வாழைப்பழ வியாபாரிகளான உயர்திரு. M. R. கோவிந்தசாமி நாயுடு, அவருடைய தம்பி கன்னைய நாயுடு ஆகிய இவ்விருவரும் எனக்கு நிச்சலும் நினைக்கத்தக்கவர்கள். இவர்களில் மூத்தவரான கோவிந்தசாமி நாயுடு பதினைந்து வருடங்களுக்கு முன்பு காலஞ்சென்றுவிட்டார். இளையவரான கன்னைய நாயுடு இனிது வாழ்ந்து வருகிருர். நான் திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை முதலான வியாக்கியான நூல்களை யெழுதுவதற்கும் அவற்றை அச்சிட்டு வெளியிடுவதற்கும் சென்னையில் காலக்ஷேபம் தொடங்குவதற்கும் இவ்விரு ஸஹோதரர்களே மூலகாரண பூதர்களாதலால் இவர்களிடத்தில் மிகமிக நன்றி பாராட்டி வருகிறேன். இவர்கள் என்னுடைய நூல்களின் வெளியீட்டுக்காகச் செலவு செய்த ரூபா அறுபதினாயிரத்திற்கு மேற்பட்டிருக்குமே யொழிய ஒருபைசாவும் குறைவாக இராது. இவர்கள் அங்ஙனம் பணச் செலவுசெய்ததை நான் பெரிதாக நினைக்கவில்லை; பலபல ஜோலிகளினால் நான் உரையெழுதி அச்சிட அனுப்பத் தாமதிக்கும் போதுகளில் கடிதத்தின்மேல் கடிதமெழுதியும் நேரில் ஓடிவந்தும் சிப்பந்திகளை

யனுப்பியும் விரைவுறுத்தியதுண்டே, அதை நினைக்கும்போது *நீராயுருகுமென்னுவி உண்மையில், ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இவர்களின்மீது ஆவேசித்து நடத்திக் கொண்டார்களென்றே எனது திடமான அத்யவஸாயம். மயிலையில்வாழ்ந்த (அட்வ கேட்) ஸ்ரீமதுபயவே. கோபாலஸாமி ஐயங்காருடைய ப்ரேரணையினாலும் நிர்ப்பந் தத்தினாலுமே பஞ்சஸ்தவ ஸ்ரீரங்கராஜஸ்தவாதிகளான ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் வியாக்கியான மெழுதலாயிற்று. இத்தகைய ப்ரேரணைகளைப்பன்னியுரைக்குங்கால் பாரதமாம். *தே ஹி நோ திவஸா கதா:* என்று நினைந்துநைகின்றேன்.



தற்காலம் நம்முடைய ஸத்காலக்ஷேப ஸபைக்குப் பலவகைகளிலும் ஆதர வளித்து ஸபையைப் போஷித்துவருகின்ற பெரியார்களை இங்கு மேலே வரிசையாக வீற்றிருக்கக் காண்மின். ஸ்ரீமான்களான—வங்கீபுரம் A. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்கள், A V கன்னைய நாயுடு அவர்கள், ஊரா. ஜகன்னாத செட்டியாரவர்கள், புலிபாடி. ஸோமஸுந்தரராவ் அவர்கள், தேங்காய்மண்டி கிருஷ்ணஸாமி நாயுடு அவர்கள், கொப்பரம் நடேச செட்டியார் என்பவர்கள் இங்கே காட்சி தருகிறார்கள்.

இவர்கள் தவிர ஸ்ரீமான் கராலபாடி ராதாக்ருஷ்ணய்யா, உயர்திரு V. N. தேவ நாதன் முதலான பலபல அன்பர்கள்மிக்கபரிவுடன் விளங்குகிறார்கள். தற்காலம் தேவ நாதன் தன்னுடைய பெருமுயற்சியினால் பலலௌகிக வைதிகப்பெரியார்களிடமிருந்து மதிப்புரைகள் வாங்கியச்சிட்டு அவற்றை இம்மலரில் சேர்த்து வெளியிடவேணு மென்று அனுப்பியுள்ளார். மற்றும் பல மதிப்புரைகளைத் தாம் அச்சிட அவசாசமில்லை யென்று, ஸ்ரீராமாநுஜன் மூலமாக வெளியிடவேணுமென்று நமக்கு அனுப்பியுள்ளார். ஏக காலத்தில் எல்லாவற்றையும் வெளியிட இயலாமையாலே, இப்போது நின்று போனவை அடுத்த ஸ்ரீராமாநுஜனில் வெளியிடப்பெறும்.

இந்த மதிப்புரைகளின் வெளியீடு அவசியமென்று அடியேன் கருதவில்லை' ஆப்தர்களின் ஆவலைப் பூர்த்தி செய்விக்கவேண்டிய' அவசியம் ஏற்பட்டதனால் இசையவேண்டியதாயிற்று.

## இனி மதிப்புரைகளின் வெளியீடு

ஸ்ரீபெரும்பூதூர். ஸ்ரீமத்பரமஹம்ஸ. யதிராஜஜீயர் மடாதிபதி ஸ்ரீமத்யதீந்த்ர ப்ரவணராமானுஜ ஜீயர் ஸ்வாமி அருளிய ஸ்ரீமுகம். ......நம் காஞ்சீபுரம் ஸ்வாமின்



எண்பத்தெட்டாவது திருவவதார மஹோத்ஸவத்தை வியாஜமாகக்கொண்டு ஒரு மலர் வெளியிட உத்தேசித்த சென்னைவாஸிகளான சில பிரமுகர்கள் நம்மிடம் ஒரு கட்டுரை விரும்பியெழுதியிருந்த கடிதம் தாமதித்துப் பார்க்கலாயிற்று. நேற்று மாசிமாதத்தில் ஸ்ரீரங்கத்தில் நடைபெற்றவொரு வேள்விக்குச் சென்றிருந்து திரும்பியபின் 15—3—78 இன்று பார்க்கலாயிற்று நம் ஸ்வாமியைப்பற்றி எழுதுவதற்கு எனக்கு என்ன அர்ஹதையுள்ளது. ஆயிரம் பக்கங்களில் எழுதவேண்டியதை அரைப் பக்கத்தில் எழுதுகிறேன். நம் ஆழ்வார்கள் எம்பெருமானை அடிக்கடி பிரான் என்கிறார்கள். உபகாரகன் என்பது அதன் பொருளென்று வியாக்கியானம் செய்தருகிறார்கள். எம்பெருமான் செய்தருளின உபகாரத்தை ''ஹந்தும் தமஸ் ஸதஸதீ ச விவேக்துமீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி'' என்று பட்டரும், ''காருணிகனான ஸர்வேச்வரன்...ப்ரதீமான சாஸ்த்ரத்தை நீர்லபயினை லருள்செய்தான்'' என்று ஆசார்யஹ்ருதயகாரரும் அருளிச்செய்தார்கள். அந்த உபகாரத்தைப் பெற்றுக் களிப்பவர்கள் யாரோசிலர். நம்காஞ்சீ ஸ்வாமி செய்தருளிய செய்துகொண்டிருக்கிற உபகாரங்கள் எண்ணிறந்தவை. மஹா பண்டிதர்களோடு சாமானியர்களோடு வாசியற ஒருவர் தப்பாமல் எல்லார்க்கும் கண்ணாடிபோல் உதவும் படியான ஆயிரக்கணக்கான நூல்களையன்றோ நம்ஸ்வாமி உதவியிருக்கிறார், உதவி வருகிறார். ஸ்வாமி நான்கு பாஷைகளிலும் எழுதிப்பதிப்பித்திருக்கின்ற நூல்களையெல்லாம் ஒரு புருஷாயுஸ்ஸில் ஒரு நபர் காபி செய்யமுடியுமா? என்று கேட்டால் ஸ்வாமியின் நூல்களில் பத்தில் ஒருபாகங்கூட காபி செய்ய முடியாது என்று ஒரு ஸமயம் ஸ்ரீ. த்ரிதண்டி ஸ்ரீமந்நாராயண ஜீயர்ஸ்வாமி மஹாஸபையில் ஸாதிக்கக் கேட்டேன். ஆங்காங்கு ப்ரவசனம் செய்யும் பண்டிதோத்தமர்கள் ஒவ்வொருவரும் மனமாரப் போற்றும் இந்த பெருமையைப் பகர்வதற்கு நானோ அதிகாரி?

இப்படிக்கு,

**யதிராஜ ஜீயர்.**

ஸ்ரீபெரும்பூதூர். 17—3—78

# AN APPRECIATION
## BY
## Advocate, V. N. VENKATAVARADACHARIAR, Madras.

With reference to the commemoration of the 88th birthday of our beloved Swami, I have been asked to write about him, obviously on account of my age and long association with him. Though I am two and a half years older and am myself an Acharya Purusha, I have always held and treated him as my Acharya during the 45 years I had the privilage of his grace. In one sense it is very easy to describe the Swami and his activities and at the same time it is difficult to do so having regard to his varied activities both in his writings and speeches, working almost 17 to 18 hours a day.

We are struck not only by his eminence in learning but also by his mastery of several languages, Tamil, Sanskrit, Telugu and Hindi. With his profound familiarity in the religious literature in all the languages, he propagates the religious doctrines to millions. I am having in mind the Ubhaya Vedantha, right from Nathamunigal, Alavandar and Emberumanar, after whose time the Vedanthas were divided into two viz., Tamil and Sanskrit. Our Swami can be described as an embodiment of all Vaishnavite literature and teachings from the earliest times upto the present day including the period after Manavalamamuni (1493) when there were several learned revered Acharyas.

Our Swami's highest degree or varied excellance consists not only in his clarity of thought but also in the tranchency of his writings, in the stentorian voice of his writings, in the stentorian voice of his *Kalakshepams*, in his innumerable writings on various Alwars and Acharyas and their works, which will not fail to attract hundreds and thousands of admiring audience. It is remarkable how he can sit in a particular place and pose without moving his legs and when I was curious to know the secret of it, he explained to me that he was doing so ever since his seventh year under the training given by his grandfather.

There is one side of his activities to which a short reference has to be made. He cannot tolerate pretended knowledge, false statements and any misreading or misinterpretation of any religious texts, from how highsoever it may emanate. He has a penchant for controversy, and as somebody remarked he has the last word in every such controversy. But it is necessary to add that this is because his statements are obviously correct and incapable of being answered. If he is pungent in his criticism it is to expose the hollowness of the other's learning because he cannot brook even a single mistake or misreading of religious texts and not with any personal ill-will or motive against the person concerned, as it will be apparent he never failed to give his due appreciation to the very same person for his merits.

One more important thing that has to be said about him is his passion for kainkarya especially to Lord Devaraja. He will be never missed in any goshti and his clarion voice will be heard by the admiring crowds of worshippers.

Our Swami's sole aim in life is service to God, writing and publishing of countless religious books on Ubhaya Vedantha - i.e. both Tamil and Sanskrit Vedantha, imparting correct knowledge in religious matters. He has largely succeded in achieving this aim, and secured hundreds and thousands of votaries and admireres from eminent persons adorning various walks of life.

His prodigious memory, profound, scholarly and encyclopaedic knowledge of high eminance on Ubayavedantha; meticulous thoroughness in this research; high powers of original thinking; sledge hammer assertiveness, Scintillating brilliance and clarity in his exposition in mettallic resonant voice; the forthright bluntness in his criticism; a very fluent and forceful writing all combined in one make him a rare and unique towering and gigantic personality of a high order in religious matters a rare personality, an Avathara Purusha, the like of whom appears only once in several centuries. We should consider highly blessed to live during his time.

The general prayer is it may the lord keep him for

'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு"

and இன்றுமொரு நூற்றுண்டிரும்".

I will however be thankful even if he is spared for the period during which *Sri Ramanuja* lived and worked.

May Lord Devaraja and other Emberumans whose names are ever in his mind and in every breath spare him for any many long long years, to continue his service to the cause of Hindu Religion particularly Ramanuja Darisanam.

**(Sd.) V. N Venkatavaradachariar,**
"Veda Velas", 4 Egmore High Road, MADRAS-8.

---

**P. B. A. the unique Assan Picturised by the Advocate, P. B. A., Dasan.**

Prathivathi Bhayankara Acharya! - Paradise for Pandits!!
Blossming Bhakthi Clatering Shakthi - Thy possession:
AUDISESHA re-born in thy Form, Oh! Venerable Vedanthi!
Nearness to God, dearness to world - thy natural Holy Mission
Nonchalant Nector - Versatile Vedantha granthas - thy abode,
Author of SRI VARAVARA MUNI DANDAKAM a masterpiece of love:
Numerous writings evidence excellent evergreen erudition:
Grandeur in style, commanding in tone, clear in expression
Avatara like Thee alone can do such Shrishti.
RAMANUJA'S rich Grace dwells in thee plenty
Almighty's blessings emanate from thee!
Cherishing concepts, charming Dogmas in bounty,
Hail thee! Oh! walking encyclopaedia of Religious Universe!!
Abundance in Asthik quality that GEETA admire
Round thee Epics flourish for men to inspire;
Young in mind, celestial in thought and spiritual in action.
Ananthachary, my humble self surrender with glee.

சென்னை பிரபல அட்வொகேட்

ஸ்ரீமான் உ. வே. V. N. வெங்கடவரதாசாரியர் ஸ்வாமியின்

ஆங்கிலக் கட்டுரையின் மொழி பெயர்ப்பு.

# மதிப்புரை.

நமது அன்பார்ந்த ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமியின் 88-வது திருநக்ஷத்திர ஆரம்ப விழாவை முன்னிட்டு அவரைப்பற்றி ஒரு கட்டுரை எழுதி அனுப்பும்படி அடியேனுக்கு விழாக்குழுவினரிடமிருந்து வேண்டுகோள் வந்திருக்கிறது; அடியேனது வயதும் ஸ்ரீ ஸ்வாமியிடம் அடியேனுக்குள்ள நீண்டகாலப் பழக்கமும் (பரிசயமும்) காரணமாக எனக்கு இக்கட்டளை ஏற்கும். அடியேனுக்கு ஸ்வாமியைவிட இரண்டுரைவருடங்கள் அதிக வயதாகி யிருந்தும் நானும் ஒரு ஆசாரியபுருஷ வம்சத்தில் பிறந்திருக்கச் செய்தேயும் நம் ஸ்வாமியையே நாற்பத்தைந்து வருடகாலமாக ஆசாரியராகப் பாவித்திருக்கிறேன், அவருடைய கிருபைக்குப் பாத்திரமாயும் இருந்து வருகிறேன். அந்த ஸ்வாமியைப்பற்றியும் அவரது கைங்கரியங்களைப் பற்றியும் எழுதுவது சுலபமென்று சிலர் நினைக்கலாம். அக்கணமே அவரது எண்ணிறந்த நூல்களையும், வியாஸங்களையும், வியாக்கியானங்களையும், உபந்யாஸங்களையும் ஆராய்ந்து, பிரதி தினமும் 17–18 மணிகாலமான அவரது அயராத (உழைப்பையும்) பரிச்ரமத்தையும் யோசித்துப் பார்த்தால் அவரைப்பற்றி எழுதுவது சிரமஸாத்தியம் என்று அடியேன் தேர்ந்தேன்.

ஸ்வாமியின் ஞானமும் கல்வியும் மிக உத்க்ருஷ்டமாக இருப்பதையும் தமிழ், ஸம்ஸ்க்ருதம், தெலுங்கு, ஹிந்தி ஆகிய பாஷைகளில் எழுதும் அவரது ஸாமர்த்தியத்தையும் நோக்கில் நமக்கு அடங்கா ஆச்சரிய முண்டாகிறது. மத ஸம்பந்தமான பல பாஷா க்ரந்தங்களில் உள்ள ஸாராம்சங்களைக் கோடிக்கணக்கானவர்களுக்குப் போதித்து வருகிறார். ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார், எம்பெருமானார் அருளிய உபயவேதாந்தப் பொருள்களை மனதில் தேக்கிப்பார்க்கும்போது அவர்கள் காலத்துக்குப்பின்பு வேதாந்தங்கள் தமிழ்–ஸம்ஸ்கிருதம் என்று இரண்டாகப் பிரிந்ததாகத் தெரிகிறது. வைஷ்ணவ கலைக்கும் ஆசாரத்துக்கும் ஸ்வாமியைப் பொக்கிஷமாகவும் பிறப்பிடமாகவும் கொள்ளலாம். ஸ்ரீ மணவாள மாமுனிகளின் காலத்துக்குப்பின் நாளது பரியந்தம் தோன்றிய ஆசாரியர்களெல்லாரும் ஒருங்கு சேர்ந்தவராக நம் ஸ்வாமியைப் பாவிக்கலாகும்.

ஸ்வாமியின் பாண்டித்யமும் பலவித விஷயங்களை வியாஸமாகவும், உபந்யாஸமுகமாகவும் வெளிப்படுத்தும் திறனும் பூருவர்கள் அருளிச்செய்த நூல்களையும் ஸ்வாமி ஆராய்ந்து விநியோகப்படுத்தும் முறையும் அவரது கணீரென்ற த்வனியும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. ஆகையால் ஸ்வாமியின் வாகமிர்தத்தைப் பருகப் பல்லாயிரக்கணக்கில் ஆஸ்திகர்கள் கூடியிருந்து ரஸிப்பதில் ஆச்சரியமில்லை. அச்சமயங்களில் ஸ்வாமி ஒரேயிடத்தில் அசையாமல் அமர்ந்து கால்களை மாற்றாமல் ஒரேமாதிரி திருமேனி ஸேவை ஸாதிப்பதன் ரகசியம் என்னவென்று அவரையே அடியேன் ஒருசமயம் கேட்டேன். தனது ஏழாவது பிராயமுதல் தம்முடைய மாதாமஹரிடம் அவ்வாறு பழகியதாகத் தெரிவித்தார்.

ஸ்வாமியின் மற்றொரு குணாதிசயத்தையும் சிறிது சொல்லவேணும். போலி வித்வத்தையும் பொய் பாசுரத்தையும் குதர்க்க வாதத்தையும், சாஸ்திரம், ஆசாரம் இவைகட்கும் பூர்வாசார்ய க்ரந்தங்களுக்கும் புறம்பான வியாக்கியானத்தையும் அவரால் பொறுக்க முடியாது. தாக்ஷிண்யமின்றி இவைகளை எதிர்ந்து உண்மைப் பொருளை நிலைநாட்டுவதில் இவருக்கு இணையே இல்லை. இவர் அங்ஙனம் ஸாதிப்பது நியாயத்துக்கும் சத்தியத்துக்கும் ஒத்ததென்றே தேறும். ஸ்வாமியினுடைய வாதம் கூர்மையாயும் கடுமையாகவும் இருந்தாலும் மதாசார நூல்களில் தவறாகவோ தாறுமாறாகவோ பேசுபவர்களிடம் அவருக்கு த்வேஷமென்பது கிடையாது. ஆகையால், அவர்களே பலர் ஸ்வாமியின் வியாக்கியானத்தையே ஆதரிக்கின்றார்கள்.

மற்றுமொரு முக்கியமான விஷயமும் அவரைப்பற்றிச் சொல்லவேண்டும். அதாவது பகவத்கைங்கரியாபிருசி முக்கியமாக ஸ்ரீ தேவாதிராஜனுக்கு எந்த உத்ஸவத்திலும் கோஷ்டியில் அந்த ஸ்வாமியை ஸேயிக்கலாம். அவரது விசேஷ த்வனியில் ஸேவார்த்திகள் ஈடுபட்டு ஆநந்தமடைவர்கள்.

ஸ்வாமி தம்முடைய வாழ்க்கையின் முக்கிய நோக்கமாக பாவிப்பது தெய்விக ஸேவையும் உபயவேதாந்த நூல்களில் உள்ள மதாசார விஷயங்களை (தமிழிலும், ஸம்ஸ்கிருதத்திலும் உள்ள) கணக்கிலடங்காத புத்தகங்களாக எழுதிப் பிரசுரப்படுத்துவதும் உண்மையான வியாக்கியானங்களை உறுதிப்படுத்துவதும். ஏற்கனவே இக் குறிக்கோள்களை ஸ்வாமி பூர்த்திசெய்து பல பெரியோர்களின் நன் மதிப்பையும் நல்வாழ்த்துக்களையும் பெற்றிருக்கிறார்.

ஸ்வாமி அபார ஞாபகசக்தியும் பரிபூர்ண பாண்டித்தியமும் பெற்றவராயும் உபயவேதாந்த சாஸ்திரங்களின் பொக்கிஷமாக மதஸம்பந்த விசாரணையில் அணுவளவு ஸந்தேகத்துக்கு மிடமில்லாமல் எழுதும் திறனுடனும் சுய ஆராய்ச்சியில் எவ்விஷயத்திலும் தேர்ந்து ஆணித்திறமாம் சாதனைகள் புரியவல்லவராயும், பிழையைக் கண்டிப்பதில் தீவிரமாயும், அநாயாஸமாயும், ஊர்ஜிதமாயும் பேசுவதும் எழுதுவதும் இவ்வாறான ஸகல குணாதிசயங்களும் ஒருங்கே பொருந்தி யிருப்பது அவரது அவதாரபுருஷத்வத்தையே காட்டுகிறது. இம்மாதிரியான மஹாபுருஷர் பல நூற்றாண்டுகளுக்கு ஒருமுறை ஒருவரே தோன்றுவதால் ஸ்வாமி காலத்தில் நாமிருப்பது ஓரதிர்ஷ்டவசமே.

ஆகையால் நாம் ப்ரார்த்தனை செய்யவேண்டுவது யாதெனில் "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு" என்றும் "இன்னமொரு நூற்றாண்டிரும்" என்றும் போற்றி ஸ்ரீ ராமாநுஜர் உபதேசித்து வாழ்ந்துவந்தகாலம் வரையிலாவது நம் ஸ்வாமியை எம்பெருமான் காத்தருளும்படி வேண்டி நிற்போமாக.

(Sd-) V. N. வெங்கடவரதாசாரியர்,

வேத விலாஸ் – ஐரோட்டு, எழும்பூர். சென்னை-8.

**ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயீல்**
சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ்

34, ஜஸ்டிஸ் சுந்தரமய்யர் சாலை
நாகேசுவரபுரம்,
மயிலாப்பூர்,
சென்னை-4.

**அன்புவெள்ளத்தின்போக்கான கடிதம்**

10—3—1978

ஸ்ரீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி பத்மவிபூஷணம் மஹாமஹோபாத்யாய ஸ்ரீபிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் சுவாமிகளின் எண்பத்தெட்டாவது பிறந்தநாள்விழா கொண்டாடப் பெறுவது தெரிய அளவற்ற ஆனந்தமும் மட்டற்ற மகிழ்ச்சியும் அடைகிறேன். பிராயம் கழிவதுபற்றி ஒருபுறம் வருத்தமும்.

அத்தகைய பெரியார் இன்று நம்மிடையே வாழ்வதற்கு நாம் அனைவரும் பெரும் பாக்கியம் செய்திருக்க வேண்டும். அறிவு, அனுபவம், கல்வி, குண நலன், பேச்சுத்திறன், விளக்கத் தெளிவு ஆகிய அனைத்தும் குறைவறப் பெற்ற நிறைகுடம் அவர்கள். அவர்களுடைய ஆழ்ந்த அறிவும், அதிசயிக்கத் தக்க நினைவாற்றலும் வியத்தகு நாவன்மையும் இன்னும் மிளிர்ந்து கொண்டிருக்கின்றன. குண நலன் களினாலும் பண்பாட்டினாலும் அவர்கள் எங்கோ உச்சத்திலிருக்கிறார்கள். ஆனால் அவர்களிடம் நிறைந்து நிற்கும் மனிதத் தன்மை அவர்கள் அந்த உச்சத்தில் இருந்த போதிலும் அவர்களுடன் பழகும் எவரிடத்திலும் அவர்கள் எங்கோ உயரத்தில் இருக் கிறார்கள் என்ற எண்ணத்தை உண்டாக்காமல் நம்மிடம் அன்பும் பாசமும் கொண்ட ஒருவரோடு நெருங்கிப் பழகுகிறோம் என்ற எண்ணத்தையே உண்டாக்குகிறது அவர் களுடைய மனிதத்தன்மையும் மனிதப் பண்பும் சமயம், ஜாதி குலம், மொழி முதலிய வற்றிற்கு அப்பாற்பட்டன

கீழே அமர்ந்திருந்தபடியே இன்னமும் ஒரு நாளில் பல மணிநேரங்கள் அவர் கள்எழுதிக்கொண்டே இருக்கிறார்கள் என்பது அவர்களைக் காண்கிற எல்லா இளைஞர் களையும் திகைப்பில் ஆழ்த்தும். அத்தகைய பெரியவர் தம்முடைய எழுத்தினாலும் பேச்சினாலும் பண்பினாலும் மக்களுக்குப் பணிசெய்து கொண்டிருக்கப் பூரண நலன் களுடன் பல்லாண்டு பல்லாண்டு வாழ இறைவன் அருள் புரிவானாக என்று பிரார்த் திப்பதைத் தவிர வேறு எப்படி நாம் அவரை வாழ்த்த முடியும்?

—2—

**வங்கிபுரம். ஏ. ஸ்ரீநிவாஸன்,**
உபதலைவர்
ஸத்காலக்ஷேப ஸபா
சென்னை-1.

**பக்தியும் சிரத்தையும் ததும்ப விண்ணப்பம் செய்கிறேன்**

ஸ்ரீமான் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி பத்மவிபூஷண மஹாமஹோபாத் யாய ஸ்ரீமதுபயவே P B அண்ணஸ்வாமியின் திருநக்ஷத்திரவிழா ஆரம்பம் ஸ்ரீகாஞ்சி யில் 19-3-78 முதல் 28-3-78 திருவிசாக நக்ஷத்திரம் வரை. அன்று ஓர் மலர்வெளி யிடச் சிலபக்தர்கள் உத்தேசித்திருப்பது தெரிந்து மிகவும் சந்தோஷமடைந்தேன்.

அடியேனும்இதில் பங்குகொண்டு ஸ்ரீஸ்வாமிகளைப்பற்றி ஓர் கட்டுரை எழுதி ஸ்ரீ ஸ்வாமியின்பெருமைகளை எனக்குத் தெரிந்தமட்டில் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்.

நமது ஸ்வாமியின் கல்வியைப்பற்றியோ, அவருடைய அபாரமான ஞானத்தைப்பற்றியோ, ப்ரவசனப் பெருமையைப் பற்றியோ, ஸௌலப்யஸௌசீல்ய குணங்களைப்பற்றியோ, உலகம்போற்றும் புகழைப்பற்றியோ, நான் எழுதுவதற்கு அருகதை யற்றவன். ஆனால் ஒன்று மட்டும் என்னால் திரும்பத் திரும்பச் சொல்லமுடியும். அதாவது ஸ்வாமி யார் என்று கேட்டால், நாம் எல்லோரும் ஸ்ரீபகவத்ராமானுஜரைப் பார்த்ததில்லை. அவருடைய சமகாலத்தில் நாம் பிறந்திலோம். இப்பொழுது அதே ராமானுஜர் ஒருவர் இருப்பார் என்றால் அவர்தான் நமது P. B. A. ஸ்வாமிகள். அடியேன் சொல்வது உண்மை என்று நிரூபிக்க உதாரணம் காட்டுகிறேன். நமது ஸ்வாமிகள் முப்பது வருடமாக மாதந்தோறும் நடத்திவரும் தமிழ்ப் பத்திரிகைக்கு என்ன பெயர் சூட்டியிருக்கிறார் என்று பாருங்கள்—''ஸ்ரீராமானுஜன்'' அந்த பத்திரிகை வரும்போதெல்லாம் ஒன்றான ஸ்ரீராமானுஜரே இவ்வடிவெடுத்து வருவதாகவே நினைக்கலாகிறது. இப்படி நினைப்பவன் நானொருவன்மட்டுமல்ல. பத்திரிகையினுள்ளே காணும் விஷயங்களும் ஸ்ரீராமானுஜரையே நினைவூட்டுகின்றன.

ஸ்வாமியின் பரிபூர்ண ஆசீர்வாதம் பெற்றவர்கள் அநேகப்பேர்கள் அநேக நன்மைகளை யடைந்திருக்கிறார்கள். அன்னவர்களில் அடியேன் ஒருவன்.

ஸ்வாமி உலகம் போற்றும் பெரியார். பகவானை நமக்குக் காண்பித்துக் கொடுக்கும் சக்தி வாய்ந்தவர். ஸ்வாமி ராம க்ருஷ்ணாதி அவதாரங்களை எடுத்துச் சொல்லும் போதும் பகவானுடைய சரித்திரங்களை நாம் கேட்கும்போதும் பகவானை நேரில் தரிசிப்பதுபோலவே யிருக்கிறது. உபந்யாஸஹாலில் கூடியிருக்கும் சபையோர்களைப் பார்த்து அவர்கள் எதை எப்படி விரும்பிக் கேட்பார்கள் என்று தெரிந்து காலக்ஷேபம் சொல்லக்கூடிய ஸ்வாமி இவர் ஒருவரே; ''ஒருவரேதான்'' என்று அடியேன் உறுதியாக நிரூபிக்கத் துணிவுடையேன். இப்படிப்பட்ட ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு இப்பூமண்டலத்தில் திடகாத்திரத்துடன் எழுந்தருளியிருந்து நம்மை எல்லோரையும் உஜ்ஜீவிக்கும்படி செய்யவேண்டும் என்று ஸ்ரீ பேரருளாளனையும் பெருந்தேவித்தாயாரையும் பிரார்த்தித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**P. B. அனந்தாசார்யர்,**
அட்வகேட்,

200, தம்புசெட்டித் தெரு,
சென்னை - 1.

உபய வேதாந்த ப்ரவர்த்தகராயும், அஸ்மதஸாதாரண ஸ்வாமியாயும், ஜகதாசார்ய ஸிம்மாஸனாதிபதியாயும், பல பிருதுகளுடன் விளங்கும் ஸ்ரீமான் காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் நம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின் எண்பத்தேழாவது திருநக்ஷத்திர பூர்த்தி வைபவத்தில், அன்பர்கள் மூலமாகப் பிரசுரமாகும் மலருக்கு, பகவத் விஷயம் கற்றறியாது, லௌகீகத்தில் வழக்கறிஞனாக உழலும் P. B. A. தாஸனை அடியேனையும், அன்பர்களின் கோஷ்டியிலே சேர்த்து கட்டுரையொன்று எழுதித் தரும்படி நமது ஆப்தரான ஸ்ரீமான் வி. என். தேவநாதன் அவர்கள் விரும்பியபடி இதை எழுதலானேன்.

சென்னைவாஸிகளான பல மஹநீயர்களின் அழைப்புக்கிணங்கி 1931 ஆம் வருஷத்தில் இம்மாநகரில் தொண்டை மண்டலம் கலாசாலை முதலிய இடங்களில் உபந்யாஸம் செய்வதற்கென்று எழுந்தருளிய நம் ஸ்வாமியின் அருமை பெருமைகளை நேரில் அனுபவிக்க நாற்பது வருஷங்களாக அடியேனுக்கு பாக்கியமிருந்தாலும் சுமார் இருப்பது வருஷகாலமாகத்தான் அதிகமாகப் பழகும் வாய்ப்பு கிடைத்து வருகிறது. இதேபோல் ஸ்வாமியிடம் அடிக்கடி கலந்து பேச அவகாசங்கள் நேரவேண்டி அவரையே பிரார்த்தித்துக் கொள்கிறேன். இதில் காணும் குற்றங்களை நீக்கி நற்றங்களைக்கொள்வாராக. பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்குள்ளான அடியேனது அநுபவங்களை இங்கு சிறிது விஞ்ஞாபிக்கிறேன்.

அடியேன் சென்னை முத்தியாலுபேட்டை ஸ்ரீவேணுகோபாலக்ருஷ்ணஸ்வாமிதேவஸ்தான தர்மகர்த்தாவாக இருக்கையில் விமானங்கள் புதுப்பிக்கப்பட்டு, ராஜகோபுரம் நிர்மாணிக்கப்பட்டு அஷ்டபந்தன மஹா ஸம்ப்ரோக்ஷணம் 1967-ம் ஆண்டு ஜனவரி மாதம் நடைபெற்றபோது பல வித்வான்களிடையே நம் ஸ்வாமி திலகமாய் வீற்றிருந்து, உவந்தருளிய உபந்யாஸ விஷயமும், அந்த ஸந்நிவேசமும் நினைக்கும் போதெல்லாம் கண்முன் தோன்றி மறைகின்றன. அடுத்தபடி 1970ம் ஆண்டு நவம்பர் மாதம் அடியேனது 70 பிராயப் பூர்த்தி விழாவில் குழுவினர் அழைப்புக்கிணங்கி, அடியேனைக் கௌரவித்துப் பொன்னாடை போர்த்தியருளி மங்களாசாஸனம் செய்ததும் மறக்கவொண்ணாதது. அதுமுதல் வருஷவாரி மார்கழி மாதம் ஸ்வாமியின் திருப்பாவை உபந்யாஸங்களுக்குப் பெரும்பாலும் சென்று ஈடுபட்டு சிரவணானந்தம் அடைந்து வருகிறேன்.

1972 ம் ஆண்டு மே மீ முதல்தேதியிலிருந்து 9நாட்கள் ஸ்ரீபகவத்கீதை பிரவசனம் ஸ்வாமி செய்யுமாறு அத்தக் கண்ணன் ஸந்நிதியில் அடியேன் ஏற்பாடு செய்து தினசரி தத்வார்த்தங்களைக் கேட்டறிந்து ரசிக்க ப்ராப்தமாயிற்று. அப்போது ஸ்வாமி தம் திருவாக்கால் வர்ஷித்த கீதாஸார விஷயங்களை அடியேன் அதற்கு முன்பாவது பின்பாவது யாரிடமும் கேட்டதில்லை. அந்த உபந்யாஸங்களை ச்ரவணம் செய்ய வந்து திரண்ட பக்தர்வெள்ளம் கணக்கிட இயலாது. திருப்பாவை ஸதஸ்ஸுகளிலும், ஸ்வாமி உபந்யாஸத்தின் தனிச்சிறப்பையும் அவர் இரண்டுமணிகாலம் அநாயாஸமாக ஆற்றும் சொற்பொழிவின் பொன்மொழிகளையும் கேட்டு அனுபவித்த ஆஸ்திக மக்கள் பல்லாயிரவர்; சென்னை உயர்நீதிமன்ற நியாயாதிபதிகள் பலரும் ஸ்வாமியின் உபந்யாஸங்களைக்கேட்டு மகிழ்வர்.

பிரதிவாதிக்குப் பயங்கரரான இந்த ஸ்வாமி அடியேன் போன்ற இதவாதிகளுக்கு வெகு சுலபர். இவரது ஸௌசீல்யஸௌலப்ய குணவிசேஷங்கள் அபரிமிதம். லௌகிக—வைதிக—பாமர —பண்டித—யுவ—வயோதிகர் என்னும் வாசியின்றியாவரும் ஸ்வாமியிடம் நெருங்கி உரையாடி இன்பம் பெறுகின்றனர். அவரவருக்குத்தக்கபடி ஒருநீராகக் கலந்து பரிமாறும் பாங்கு ஆச்சரியமானது.

ஸ்வாமியின் மேதாவிலாசத்தையும், கவிதா சாதுர்யத்தையும், சொல்வண்மையையும், எழுத்து வல்லமையையும் விரிவாக எழுதத்தொடங்கினால்முடிவுகாணவேமுடியாது. ஸ்வாமியைப்போல் பல நூற்றுக்கணக்கான க்ரந்தங்களை வியாக்யா

ஸங்களோடு எழுதி அச்சிட்டு யாவரும் வாசித்து உஜ்ஜீவிக்குமாறு விநியோகித்து வரும் தனிப் பெருமையும் அபார சக்தியும் யாருக்கும் இராதென்றால் இதை மறுப்பாருண்டோ? ஸம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு பாஷைகளில் நாளொன்றுக்கு சுமார் 50 பக்கங்களுக்குக் குறையாமல் தானே எழுதுவதாகவும், 5 மணிநேரமே விச்ராந்திக்குத் தமக்கு அவகாசம் போதும் என்றும் ஸ்வாமியே ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். நியாயத்துக்கும், சாஸ்திரத்துக்கும், ஆழ்வாராசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளுக்கும் விரோதமாகவோ குதர்க்கமாகவோ யார் எது எழுதினாலும் பேசினாலும் உடனே கண்டனம் எழுதியே தீருவர். இது ஆஸ்திக வுலகம் முழுதுமறிந்த விஷயம். இம்மாதிரியான சமயங்களில் ஸ்வாமி சீற்றமும் ஆவேசமும் மேற்கொண்டு உண்மையையும், நியாயத்தையும் சாதிப்பதில் சமர்த்தர் என்பதைச் சொல்லாதவர்களில்லை. இவ்வித விஷயங்களில் அவரது துணிவும் தாக்ஷிண்யமின்மையும் போற்றத்தக்கன. அடியேனே இம்மாதிரியான சில சந்தர்ப்பங்களில் ஸ்வாமி எடுத்துள்ள நடவடிக்கையை நேரில் அனுபவித்து ஆமோதித்தும் இருப்பதால் மனமார இதைத் தெரிவிக்கிறேன்.

நிற்க, ஸ்வாமியைப் பலர் அவதார புருஷராகவே பாவித்து வணங்குகிறார்கள். சிலர் ஸ்ரீராமாநுஜரின் புனரவதாரம் என்பர். மற்றும் சிலர் ஸ்ரீமணவாள மாமுனிகள் இவர்பால் ஆவிர்பவித்துள்ளார் என்பர். இதன் அடிப்படையையும், கருத்தையும் யோசிக்கும்போது ஸ்வாமி தெய்வீகத்தன்மை வாய்ந்தவர் என்பதில் ஐயமில்லை. பன்னிரண்டு பிராயத்திற்குள்ளேயே நாலாயிரதிவ்ய பிரபந்தங்களையும் ஸாஹித்யங்களையும் பூர்த்தியாய் திருத்தகப்பனாரிடம் அதிகரித்து உணர்ந்த மஹா மேதாவியாய் விளங்கினார். பதினான்காவது வயதிலேயே ஸ்வாமியின் திருத்தகப்பனார் திருநாட்டுக்கெழுந்தருள, பிறகு ஸ்ரீ காதி அனந்தாச்சார்யர் ஸ்வாமி என்று பிரக்யாதி பெற்ற மஹானிடம் குருகுல வாஸமிருந்து ஸகல சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ந்தவுடன், அவர் முன்னிலையிலேயே பிரவசனம் செய்ய ஆரம்பித்தார் என்பது பிரசித்தம். தமது மாதாமஹஸ்வாமியிடம் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களையும் கற்று மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர் குழுவின் "செந்தமிழ்ச்செல்வர்" என்ற விருதையும் பெற்றார். இருபத்திரண்டு வயதுக்குமேல் வேதமும் ஓதித் தேர்ச்சி பெற்றதுடன் வேதவேதாந்த பாடசாலையும் ஸ்தாபித்தார் இம்மஹானுபாவர். ஸ்ரீகாஞ்சீ ஸன்னிதிவீதியில் ஸ்ரீநம்பிள்ளை சந்நிதியை ஸ்தாபித்து நித்யப்படி ஸேவைசாத்துமுறைகள்நடக்க ஸ்வாமி ஏற்பாடுசெய்திருப்பது யாவரும் அறிந்ததே. ஸ்ரீ காதி ஸ்வாமி நடத்திவந்த மாதாந்த ஸம்ஸ்கிருத பத்ரிகையை நம் ஸ்வாமியிடம் அந்த ஸ்வாமி தன் வயோதிக காலத்தில் ஒப்புவித்ததையே வியாஜமாகக்கொண்டு பல பாஷைகளிலும் "ஸ்ரீ ராமாநுஜன்" போன்ற மாதாந்தப் பத்திரிகைகளைப் பிரசுரம் செய்ய ஆரம்பித்து இடையறாமல் முப்பது வருஷங்களாக நடத்தி வருவது நாடறிந்ததே. இவைகளையெல்லாம் மனத்தில் நிறுத்தி யோசிக்குமளவில் ஸ்வாமிக்கு அபாரசக்தி பகவத் கடாக்ஷத்தினால் உண்டாயிற்றென்றே தீர்மானிக்கலாம்.

ஸ்வாமியின் திருவுருவ தேஜஸ்ஸும், திவ்யோர்த்வ புண்ட்ரங்களும், கம்பீரப் பார்வையும், திருமுகவிலாசமும் நோக்கில் மேற்சொன்ன ஆசார்ய ஸ்வாமிகளின்

புனரவதாரம் என்பதில் ஐயமில்லை. முக்கியமாக, ஸ்ரீகாஞ்சீ தேவராஜஸ்வாமி ஸந்நிதி முதலான திவ்யதேசங்களில் நடக்கும் ஸகல உத்ஸவங்களிலும் வாசிக கைங்கர்யம் செய்வதையே விசேஷ தருமமாகக் கொண்டு ஸர்வாவஸ்தைகளிலும் அனுபவிப்பது அன்னாரின் இயற்கையானகுறிக்கோள். ஸ்வாமியின் தற்போதுள்ள அசக்தியையும் வயது முதிர்ச்சியையும் யாவரும் உணர்ந்திருந்தும் நாம் அவருக்குச் சிரமம் கொடுத்துக்கொண்டே இருக்கிறோம். ஸ்வாமியும் தம் ஆத்ம சக்தியால் எதையும் பொருட்படுத்தாமல் நம்மை உகப்பிப்பதே புருஷார்த்தமென்று கொண்டுள்ளார்போலும். அவரது அபூர்வ கண்டத்வனியும், அபாரஞாபகசக்தியும் ஸ்வாமியைவிட்டகலாதிருப்பதால், தாம் கற்றதையெல்லாம் பலரறிய ஸ்ரீ எம்பெருமானைப்போலவே வாரிவழங்க ஸ்ரீதேவப்பெருமாளே அருள் புரிவார் என்பது திண்ணம். சமீபத்தில் ஸ்வாமியின் திருப்பாவை உபந்யாஸம் கிரமப்படி சென்னையில் 51வது காலக்ஷேபமாக நடைபெற்றபோது ஒரே நாளில் (6) ஆறு இடங்களில் ஸ்வாமி ஆத்யாச்சரியமாய் பிரவசனம் செய்தது பலருக்கு ஞாபகம் இருக்கலாம். திருஷ்டிதோஷத்துக்கு அஞ்சி இந்த அனுபவத்தை விஸ்தரிக்காமல் நிறுத்திக் கொள்ளுகிறேன். ஸ்வாமியின் தெய்வீக சக்திக்கும் அவருக்கு நம்மீதுள்ள கருணைக்கும் வேறு சான்று தேவை இல்லை.

ஸர்வே ஜநாஸ ஸுகிநோ பவந்து

—டு—

# நம் அண்ணா ஸ்வாமி

—A. ராமானுஜாசாரி, B A

ஸ்ரீமான் ப்ர. ப. அண்ணங்கராசாரியருடைய விமர்சகர்கள் பலதிறப்பட்டவர்கள். அவர்கள் தங்கள் தங்கள் பாண்டித்யம், ரஸிகத்தன்மை, சப்பிரதாயத்தில் ஊக்கம், மனப்பக்குவம் இவைகளை அடியொற்றி, அவருடைய குணாதிசயங்களை விமர்சிப்பது இயல்பு. இம்மஹானிடம் அடியேன் கண்டு வியக்கும் வைபவம் என்னவென்றால் அவர் எதை எழுதினாலும் பேசினாலும் அவை உயர்நீதிமன்ற ஜட்ஜ்மெண்டைப்போல் தக்க ஆதார பூரணமாயும் தர்க்கரீதியாயுமிருக்கும். அதை இல்லை செய்யவோ மறுக்கவோ மறுக்கநினைக்கவோ யாராலும் முடியாது "பொய்யிலாத மணவாள மாமுனி புந்திவாழி" என்று மங்களாசாஸனம் செய்வதுபோல், நம் ஸ்வாமிக்கும் "பொய்யிலாத அண்ணாஸ்வாமி திருவாக்கு" என்று விருது கொடுத்துப் பல்லாண்டு பாடுவது சாலப் பொருந்தும்.

இந்தப் பெருமைக்கு அடிப்படையான காரணம் ஸ்வாமியின் வித்யாப்யாஸத்தின் மஹிமை யென்னத் தடையில்லை. இளமைப்பருவத்திலிருந்தே ஸ்வாமி 'கற்கக் கசடற' என்ற மூதுவர் மொழியைக் கடைப்பிடித்திருந்தவர். வடமொழியிலுள்ள பலவகைப்பட்ட நூல்கள் தவிர, தமிழ் இலக்கியம் இலக்கணம், சம்பிரதாய க்ரந்தம், பூர்வாசார்ய ஸகல ஸ்ரீஸூக்திகள் வேதம் இவைகளை அத்யயனம் செய்யும் போது

மேல் புல் மேயும். ஸ்வபாவம் ஸ்வாமிக்கு அறவே இருக்கவில்லை. ஆராய்ச்சி மனப்பான்மையுடன் கசடறக் கற்றவர். இந்த ஆழ்ந்த அறிவே வித்யார்த்தி தசையிலேயே அண்ணாவை 'சூர்க்கத்திப் பரீக்ஷை கொடுக்கத் தயாராக்கி விட்டது! கத்தியைத்தீட்டி எதிரே வைத்துக் கொண்டு 'என்னைப் பரீக்ஷைசெய்யுங்கள்; பரீக்ஷையில் தப்பினால் இந்தக் கத்தியால் நாக்கை அறுத்திடுங்கள்', என்று சவால்கொடுத்தவரென்பது உலகப் பிரசித்தமன்றோ? இந்தவயதிலுங்கூட அப்படியே கொடுப்பார். இந்த அசாதாரண ஸாஹஸம் படித்த விஷயத்தில் சந்தேகமற்ற அறிவு இருந்தாலொழிய சாத்தியப்பட்டாதல்லவா? ஒரு பரீக்ஷையில் வித்யார்த்தி அண்ணாவை நாச்சியார் திருமொழி முதற் பதிகத்தில் ஒன்பதாம் பாட்டை (தொழுது முப்போது முன்னடி வணங்கி) என்ற பாசுரத்தை எழுதிக்காட்டச் சொன்னார்கள். பரீக்ஷகர்களுடைய கருத்தையறிந்து அப்பாசுரத்தின் இரண்டாமடியில் முற்கூற்றை மட்டும் 'பழுதின்றிப் பார்க் கடல் வண்ணனுக்கே, என்று எழுதிக்காட்டினார். பல பதிப்புகளில் பால்-கடல் என்று கருதி பாற் கடல் என்று அச்சிட்டிருந்தது. பார் கடல் (பார் சூழ்ந்த கடல்) என்றே பெரியவாச்சான் பிள்ளை உரை வகுத்துள்ளார். பரீக்ஷகர்கள் 'இவரைப் பரீக்ஷிக்க நாம் அதிகாரிகளல்லோம்' என்று பரீக்ஷையை நிறுத்திக் கொண்டார்கள். இப்படிப் பல.பல.

இக்காலத்து வித்யார்த்திகள் படிப்புமுடிந்ததும் தாங்கள் பயின்றவிஷயங்களைப் பொதுவாக இலக்கணம் முதலிய இளமைப்பாடங்களை மறந்துவிடுகிறார்கள். நம்ஸ்வாமி இந்த 87.வது வயதிலும் தமது உபந்யாஸங்களிலும், வியாஸங்களிலும் அமரம் அலங்காரம், நன்னூல், தொல்காப்பியம், பாணினீயம் இவைகளின் இலக்கண சூத்திரங்களையும் திருக்குறள் முதலான செய்யுள்களையும், ஆழ்வார் பாசுரங்கள், உபநிஷத்து, வியாக்கியான பங்க்திகள் போல் உரிய சந்தர்ப்பங்களில் உத்தரித்து விளக்குவதைக் காண்கிறோம். அவரவர்கள் பிரசுரிக்கும் பத்திரிகைகளில் ஸ்வாமியின் கவனத்திற்கு வரும் கட்டுரைகளில் காணும் குற்றங்குறைகளை உலகுக்கு உண்மை தெரிவதற்காக எடுத்துக்காட்டி உபகரிப்பது ஸ்வாமியின் வழக்கம் 'ஒருவர் தான்தோன்றித் தனமாக ஏதேதோ எழுதிப் போந்தால் அவர் எந்த சம்பிரதாயஸ்தரா யிருந்தாலும் பிழைகளைக் கண்டிக்காமலிருக்கமாட்டார் நம்ஸ்வாமி. இதைச் சகிக்கமுடியாத சில 'வித்வான்கள்' தங்கள் சம்பிரதாயத்தைத் தாக்குவதாக ஸ்வாமியைப் பழிக்கக்கூடும். தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்களையும் அவர்கள் எழுதுவதிலோ, சொல்லுவதிலோ பிழையிருந்தால் ஸ்வாமி கண்டிக்காமலிருந்ததில்லை என்பது உலகறிந்த உண்மை. அஸ்து.

ஸ்ரீ அண்ணங்கராசாரியருடைய குணாதிசயங்களில் அவருடைய உபந்யாஸ சைலிக்கு தனிப்பட்ட ஸ்தானமுண்டு. சபையில் பேசவேண்டிய விஷயத்தை subject முன்கூட்டி அவரிடம் அறிவிக்க வேண்டிய அவசியமில்லை. கையில் குறிப்பு எழுதி வைத்துக்கொண்டு பேசும் வழக்கமும் அவர்க்கு இளமையிலிருந்தே கிடையாது. ப்ரவசனமும் கங்காப்ரவாஹமோ, காவிரிப் பெருக்கோ என்னலாம்படி இருக்கும் என்று நான் சொல்லவேணுமோ? எந்தபாஷையிலும் கேட்டவர்கள் எந்தநாட்டிலுமுள்ளார்களன்றோ? அதிசயந்தான் என்னே! இவர் சொற்பொழிவில் வியாஸர், பராசர், வால்மீகி முதலிய ரிஷிகள், ஆழ்வார் ஆசாரியர்கள் யாவரையும் ஒருங்கே ஒரே மேடையில் ஸ்வாமியின் மூலம் கேட்டுக் களிக்கிறோம். ஸ்வாமி ஹிந்து மதத்திற்கும் முக்கியமாக

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கும் புரிந்திருக்கும் சேவை ஒரு மஹாபாரதம். மேதாவிகள் ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தங்களின் "நடமாடும் புத்தகாலயம்" என்றும் இருபதாவது நூற்றாண்டு "ராமானுஜ திவாகரர்" என்றும் போற்றி அஞ்ஜலி செலுத்துகின்றனர். நாமும் ஸ்வாமியின் திருநட்சத்திர தினமாகிய பங்குனி விசாகம் இன்று வாழ்க இராமானுசன்; வாழ்க அண்ணாஸ்வாமி! வாழ்க ஸ்ரீவைஷ்ணவம்! என்று குரல் எழுப்பி மங்களா சாஸனம் செய்வோம்! ... ... •

நித்ய ஸ்ரீர் நித்ய மங்களம்.

—5—

**V. N. தேவநாதன்.**
213, கோவிந்தப்பநாயகன் தெரு,
*சென்னை-1.*

**—மகிழ்ச்சி மதிப்பு—**

ஸ்ரீவைஷ்ணவ உலகத்தில் 'ஜகதாச்சாரியார்' மஹாமஹிமோபாத்யாய பிரதிவாதி பயங்கர ஸ்ரீ அண்ணாஸ்வாமிகள் திருநாமத்தைக் கேள்விப்படாதார் இல்லையென்றே சொல்லுவேன். நமது ஸ்வாமிகள் பெற்றிருக்கின்ற அபார சகல யோக்யதைகளை எண்ணிப்பார்த்தால் இவர் இப்பிறவியில் கல்விபயின்று இந்த மகாப்பெரிய யோக்யதைகளைப் பெற்றார் என்று சொல்வதற்கில்லை. நெஞ்சாலும் எண்ணமுடியாது. ஸ்வாமிகளைப்போல் அவதாரபுருஷராக பல நூற்றாண்டுகளுக்குப்பின் தான் தோன்றுகிறார்கள். ஸ்வாமிகள் விஷ்ணுவின் அவதாரமே என்று உறுதியாகக் கூறமுடியும்.

ஸ்ரீ ஸ்வாமிகளுடைய பெருமைகளைப்பற்றியும் பாண்டித்யத்தைப்பற்றியும் அறிவிலியான அடியேன் முற்றும் எடுத்துரைப்பது ஸாத்தியமன்று அசக்தன். அடியேனை ஆளாக்கிய எம்பெருமான் ஸ்வாமிகள் திருவடிகளின் நிழல் மூலமாகவே ஆட்கொள்வான் போலும். அடியேன் அனுபவத்தில் வரும் அனுபவங்கள் கண்கூடு. அடியேனுக்கு தாங்கமுடியாத அநேக கஷ்டநஷ்டங்கள் ஏற்படும்போதும் அடியேன் திக்குமுக்காடும்பொழுதும் ஸ்ரீஸ்வாமிகள் கனவில் அடியேனுக்கு பிரத்தியக்ஷமாகி கடாக்ஷிப்பார்கள். இந்த 15, 16 வருட காலமாக அடியேன் ஸ்வாமிகள் இடும் கட்டளைகளை தவறாமல் செய்துவருவதுமட்டுமல்லாமல் ஒரு நிமிஷமும் அடியேன் மனத்தைவிட்டு பிரியாநிலையில் ஞாபகமாகவே இருந்துவருகிறேன். அதனாலேயே அடியேன் ஆயுள் வளர்ந்துவருவதாக சத்தியமாக நினைக்கிறேன். உறுதியாகவும் கூறுகிறேன்.

அடியேன் படுக்கை அறையில் ஸ்வாமிகளின் திருவுருவத்தை பெரிதாக எழுதி வைத்திருக்கிறேன். காலையில் எழுந்ததும் ஸ்வாமிகளை சேவித்து 10 நிமிஷம் அவரை நினைத்து ஜபம் செய்துவிட்டபின்புதான் மற்றக் காரியங்களை முடித்துப் பெருமாளிடம் பாசுரங்களை ஸேவிப்பேன். இன்றளவும் அப்படியே நடக்கிறேன். அடியேனுக்கு கண்கண்ட பெருமாளாகவும், இராமானுஜராகவும் கனவிலும் நனவிலும் கடாக்ஷித்து வருவதால்தான் என் குடும்பம் க்ஷேமத்துடன் இருக்கிறது என்று பிரமாணத்தின் பேரில் சொல்லுகிறேன். ஸ்ரீஸ்வாமிகளின் திருவடிகளை என்பிள்ளைகள் மானசீகமாகவே தியானம்செய்து அடிக்கடி தான்காணும் கனவுகளை சொல்லுவார்கள். ஸ்ரீஸ்வாமி

களை ஸேவிக்க அடியேன் காஞ்சி செல்வேன் ஸேவிப்பேன் ஸ்வாமிகளின் முதல் கேள்வி—குடும்பக்ஷேமம், பிள்ளைகள் நலம்தானா? என்பதுதான்.

நமது ஸ்வாமியின் வாழ்க்கையில் நடந்த அநேக நிகழ்ச்சிகளில் அற்புத நிகழ்ச்சியைச் சுருக்கமாக வெளியிடுகிறேன்.

40 பக்கங்கள் [D/C 1க்கு 4 பக்கங்கள்] கையால் எழுதிய்து (manscript matters) அச்சகத்துக்கு எழுதி அனுப்பியிருக்கிறார்கள். அது தற்செயலாக காணாமல் போனது திரு கண்ணப்ப முதலியார் என்பவர் ஸ்ரீஸ்வாமிகளுக்கு (கம்பாஸிடர்) வேலை பார்ப்பவர் ரத்தினம் அச்சகம், branch 65, திருப்பள்ளித் தெருவில் இருந்துவந்தது.

Manscript காணமல் போனதை சொல்லி வேறு 40 பக்கங்கள் எழுதி வாங்கி வந்து கம்போஸ் செய்து திருத்திவந்தபின் அச்சில் ஏற்ற பேப்பர் எடுத்தபோது அதனுள் பழைய manscript இருக்க. இரண்டையும் ஒத்துப்பார்த்தபோது பக்கத்திற்குப் பக்கம் எவ்விதமான மாற்றமும் இல்லாததுகண்டு திரு கண்ணப்ப முதலியார் கண் கலங்கிவிட்டார். நமது ஸ்வாமிகள் எது எழுதினாலும் அதற்கு copy வைத்துக்கொள்வது பழக்கமில்லை. இந்த விஷயத்தை அடியேனும் திரு கண்ணப்ப முதலியாரும் பலதடவை பலர்முன் பேசி ஸ்வாமிகளின் அபார ஞானம். ஆச்சரியமான உபந்யாஸ சக்தி இவைகளைப்பற்றியே பேசிப் பொழுதுபோகும் எங்களுக்கு.

நமது ஸ்வாமிகள் வடநாடு யாத்திரை பலகால் சென்றிருக்கிறார்கள் அடியேன் மூன்று தடவை அவர்களுடன் சென்றிருக்கிறேன். ஸ்வாமிகளுக்கு ஒவ்வொரு ஜங்ஷன்களிலும் மாலை மரியாதை பால் பழவகை இவைகளுடன் வந்து சேவிக்கும் பக்தர்கள் ஏராளம். ஸ்ரீ ஸ்வாமிகள் புறப்பட்டது முதல் போய்ச்சேருமிடம்வரையில் (அதாவது பம்பாய், டில்லி, அலஹாபாத்வரை) எந்த ஆகாரமும் பால் பழம் தண்ணீர் கூட அருந்தாமல் ஊர்சேர்ந்தபின் ஸ்நானவகைகள் எல்லாம் முடிந்தபின்புதான் ஆகாரம் எடுத்துக் கொள்வது வழக்கமாக இருந்துவருவதுஆச்சரியம். நடுவழியில் வரக்கூடிய பால் பழவகைகள் எல்லாம் கூடப்போன எங்களுக்குத்தான் யோகம்.

ஸ்ரீ ஸவாமிகளின் திருவருளால் உடன் சென்ற 10 பக்தர்களுக்கும் பால் தயிர் பழம் வகைகளும், இடவசதியும் தாராளமாகக் கிடைத்தது. ராஜயோகமென்றே சொல்லலாம். பரோடா மஹாராஜா கொடுத்த வரவேற்பு மாலைமரியாதை பழம் வகை ஏராளம். கொட்டுப்பனியில் மஹாராஜா அவர்களே காத்திருந்து ஸ்டேஷனுக்கு வந்து அழைப்புத்தந்து அழைத்துக்கொண்டு போனார்கள். 15, 20 நாட்கள் சுற்றுப் பயணம் முடித்து சென்னை வந்து சேரும் வரையில் இந்திரலோகத்திலிருந்து வந்ததாகவே நினைக்க வேண்டியதாய் இருந்தது. ஹரித்துவார் போய் சேர்ந்தோம் அவ்விடம் உள்ள மஹந்த்களும், பக்தர்களும், மார்வாடிகளும், குஜராத்திகளும், ஏழை எளியோர், தனவந்தர் முதல் ஸ்வாமிகளை வந்து சேவித்துக்கொண்டு பால், பழம், மாலை மரியாதைகளுடன் செய்த சம்பாவனைகள் ஏராளம்.

ஹரித்வார் போய் இறங்கியதும் போஸ்ட் ஆபீஸுக்குச் சென்று போஸ்ட் வாங்கிவரும்படி சுவாமிகள் உத்தரவிட்டார்கள். அடியேனும், (Free India Editor) திரு கிருஷ்ணமூர்த்தி அவர்களும் அந்த ஊர் போஸ்ட் ஆபீஸில் ஸ்ரீ சுவாமிகள் வந்

திருக்கும் செய்தியைக்கூறி போஸ்ட் இருக்கிறதா என்று கேட்டபொழுது 'ஆம் இருக் கிறது' என்று கூறி போஸ்ட் ஆபீஸில் உள்ள அனைவரும் ஸ்வாமியை ஸேவிக்கப் புறப்பட்டு வந்துவிட்டார்கள்.

ரிஷிகேசத்திலும் ஏராளமான பக்தர்கள் சேவிக்க வந்துவிட்டார்கள். சுவாமி சித்பவானந்தர் மடத்தினர் நமது ஸ்ரீ ஸ்வாமிகளை அமோக வரவேற்புடன் வரவேற்று மாலைமரியாதையுடன் ஸம்பாவனை செய்தார்கள். திரும்பும்பொழுது ஸ்ரீஸ்வாமிகளுக்கு வந்த சம்பாவனைகளின் மொத்தத் தொகையில் சுமார் ரூபாய் 2500 இருப்பு இருந் ததை ஸ்வாமிகளிடம் அடியேன் கூறினேன். மொத்தபணத்திற்கும் ரகவாரியாக சால்வைகளும் துப்பட்டாக்களும் கடையில் எடுத்துக்கொண்டுவரும்படி ஸ்ரீஸ்வாமிகள் கூறினார்கள். அதன்படி எடுத்துவந்தோம். இவ்வளவும் எதற்கு? ஸ்ரீஸ்வாமிகள் என்னசெய்யப்போகிறார்கள் என்று எதிர்பார்த்தோம். நெடுகிலும் சேவிக்கவந்த மஹந்துகளுக்கும், சேவிக்க வந்த பக்தர்களுக்கும் பரிசளிப்பாக வாரிவழங்கியவைதயும் மீதம் உள்ளதை சென்னைக்கு வந்தபின் சிலருக்கும். காஞ்சியில் பாடசாலைப் பிள்ளை களுக்கும் கொடுத்தார்கள். கொடுப்பது புத்தகங்களாகவோ, சால்வைகளாகவோ, பணமாகவோ. சுவாமிகளை கொடைவள்ளல் கர்ணன் என்றே கூறுவேன். எவ்வளவோ புத்தகங்களை கேட்பவர்களுக்கு ஸ்ரீஸ்வாமிகள் வாரி வழங்கி வருகிறார்கள் இன்றளவும்.

ஸ்ரீஸ்வாமிகளை அலஹாபாத் யூனிவர்ஸிடியிலிருந்து மிக வலுக்கட்டாயமாக மூன்று முறை வற்புறுத்தி அழைத்தார்கள். ஸ்ரீஸ்வாமிகள் புறப்பட்டபோது அடியே னும் உடன் போயிருந்தேன் அலஹாபாத் யூனிவர்சிடி மூலம் அப்போதிருந்த உப ஜனாதிபதி தலைமையில் வரவேற்பு நடந்தது. மாலை மரியாதை பேண்டு வாத்தியங்களு டன் வரவேற்றனர். பக்கத்து கிராமங்களில் கேள்வியுற்ற பொதுமக்கள் திரள்திரளாக வந்து கொண்டேயிருந்தார்கள். யூனிவர்ஸிடி பெரிய ஹால் முழுவதும் நிரம்பிவிட்டது வெளியிலும் மக்கள் நின்று கொண்டிருந்தார்கள் வெளியிலும் மைக் அரேஞ்ஜ் மென்ட்ஸ் செய்யப்பட்டிருந்தது. சுமார் 5000 ஜனங்கள் இருக்கலாம் என மதிப்பிட லாம். ஹாலின் உள்ளே மகந்துகளும், பேராசிரியர்களும், மாணவர்களும், மந்திரி மார்களும் நிரம்பியிருந்தனர்.

ஸ்ரீ ஸ்வாமிகள் தாம் எடுத்துக்கொண்ட Subject 'அணுவிற்குள் சமுத்திரம்' என்ற தலைப்பில் சமஸ்கிருத மொழியில் உபன்யாசம் Pin drop silent ஆக மக்கள் அனைவரும் அமைதியாக இருந்தார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் உபன்யசிக்கும் பொழுது ஆச்சரியப்படும்படியாகவும், அதிசயப்படும்படியான சொற்பொழிவுகளையும் கேட்ட அவ்வளவு மக்களும் கைதட்டி ஆரவாரம் செய்தது வானைப்பிளக்குமளவு பேரொலி யாக இருந்தது. அடியேனால் அதனை அனுபவிக்க முடியாத காரணம் சமஸ்கிருதம் தெரியாததனால். முடிவாக உபந்யாசம் முடிந்தபின் ஸ்ரீஸ்வாமிகளுக்கு மஹாமஹிம உபாத்யாய பட்டம் கொடுத்து சால்வை போர்த்தி Chequeம் கொடுத்தார்கள். இவ் வைபவம் உபஜனாதிபதி தலைமையில் நடந்தது.

அலஹாபாத்தில் ஸ்ரீஸ்வாமிகள் அனுமதி இல்லாமல் பல இடங்களில் உபன்யா சத்திற்கு ஏற்பாடுசெய்திருந்தார்கள் பலர் அடியேனிடமும் வந்து கேட்டுக்கொண்டார்

C

கள் அப்படி ஸ்ரீஸ்வாமிகள் ஒப்புக்கொண்டிருந்தால் ரூபாய் பல ஆயிரம்வரையில் சம்பாவனைகள் வந்திருக்கும். அதுசமயம் காஞ்சி தேவராஜபெருமாளுக்கு உற்சவாதிகள் இருந்த சமயமாதலால் முடியாது என்று ஊருக்குப் புறப்பட்டு விட்டார்கள்

ஸ்ரீ ஸ்வாமிகளுடன் அடியேன் சென்று நிகழ்ந்த சம்பவங்களும் அடியேன் கண்ட கண்கொள்ளாக் காக்ஷியும் ஒரு ராமாயணமாகவே எழுதலாம்.

கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு என்பார்கள். செல்லுமிடமில்லை ஸ்வாமிகள் செல்லாத இடமெல்லாமிருந்தும் சிறப்பும் மாலையும், மரியாதைகளும் அவரைத் தேடிக்கொண்டு வருவதைப் பார்த்ததில் வடநாடு பூராவும் ஸ்வாமிகளிடம் எவ்வளவு பக்தியும் அன்பும் குடிகொண்டிருக்கிறது என்று அடியேனுக்குத் தெரிய வந்தது. 1975வது வருடம் பிப்ரவரி மாதம் என்ற ஞாபகம். ஒரு சனிக்கிழமை இரவு அடியேன் கனவு ஒன்று கண்டேன். காஞ்சியில் கீழண்டை வீதி வழியாக அடியேன் 6 மணி காலையில் நடந்து போகிறேன். 30 பேர்கள்கொண்ட ஒரு கூட்டம். அதாவது 12 முதல் 15 அடி உயரம் 4 அடி அகலம் கறுப்பு நிறம் 3 வரிசையாக கிழக்கிருந்து மேற்காக வருகிறார்கள். அடியேனைக் கண்டதும் தலைவனாக உள்ளவன் கேட்பது; "அண்ணங்கராசாரியார் மாளிகை எங்கே?"என்று. அடியேன் சொல்வது; "அது எங்கோ ;எனக்குத் தெரியாது" என்ன, தெரியாதா? என்று முறைப்பாகப் பார்த்துவிட்டுக் கூட்டம் நகருகிறது. மேலே கேளுங்கள்.

அடியேன் கிழக்கே வருகிறேன். பின்னும் ஒரு ஆள் என்பின்னே ஓடிவந்து கையைப் பிடித்து உனக்குத் தெரியாமல் இருக்காது எங்கே வீடு என்ற கேள்வி; நான் கோபமாக கையைவிடு எனக்குதெரியாது என்கிறேன். அதில் பெரிய ஆளாக வந்தவன் சரி விட்டுவிடு என்று போகிறார்கள். உடனே விழித்துக்கொண்டேன். ஞாயிறு காலை 4 மணி இருக்கும் கொஞ்சம் நேரம் எழுந்து அமர்ந்து மறுபடியும் படுத்தேன். காலை சுமார் 7 மணிக்கு எழுந்து ஸ்நானம் செய்து பூஜை முடித்தேன். அண்ணாமலை நாடார் என்பவருக்கு போன் வந்தது. ஸ்ரீஸ்வாமிக்கு உடல்நிலை சரியில்லை. தேவநாதனிடம் சொல்லவும் அவர் போனில் கிடைக்கவில்லை என்பதாக வந்ததைக் கூறினர். அவர்வந்துசொல்ல உடனே காஞ்சிக்குச் சென்றேன். ஸ்ரீஸ்வாமிகள் படுத்த படுக்கையில் இருக்கிறார்கள். ஜ்வரம் 106 டிகிரி என்று டாக்டர் சொல்லி விட்டு 24 மணிநேரம் பார்ப்போமென்று சொன்னதாகத் தெரியவந்தது அன்றிரவும் அங்கிருந்தேன். காலை எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு ஸ்ரீஸ்வாமி படுத்திருக்கும் இடத்தில் வந்து அமர்ந்தேன். மணி 10 ஆயிற்று ஸ்ரீஸ்வாமி அதுவரை பிரக்ஞை இல்லாமல் இருந்தார்கள். அங்கே மணி அடிக்கக்கூடிய கெடிகாரம் எதுவும் கிடையாது அப்பொழுதுதான் சற்று உடல் அசைவு ஏற்பட்டு 'யாரது?' என்று மெல்லிய குரலில் கேட்டார்கள். அடியேன் தேவநாதன் என்றேன் மணி என்ன 10 இருக்குமா? என்றார்கள். அங்கிருந்த அவ்வளவு பேருக்கும் ஆச்சரியமாகப் போய் விட்டது. அப்பொழுது மணி 10 தான். இது நிற்க. 1977ம் வருஷம் டிசம்பர் மாதம் சென்னையில் திருப்பாவை காலக்ஷேபம் நடந்து கொண்டிருக்கிறது. 10 நாட்கள் தான் நடந்தது. ஸ்ரீஸ்வாமிக்கு திருமேனி கவலைக்கிடமாயிருந்து பக்தர்களின் பாக்கியவசத்தால் தேறிற்று.

பல வித்வான்களும் மகான்களும் ஆங்கிலம் படித்த மேதாவிகளும் ஸ்ரீஸ்வாமிகளைப்பற்றி விசேஷமாய் விமர்சிக்கத்தகுந்தவர்கள் இருக்கும்போது, அடியேன் ஸ்ரீஸ்வாமிகளைப்பற்றிஎழுதுவதற்கு எந்தவிதயோக்கியதையும் அடியேனுக்கில்லை அவர் இடும் கட்டளையைத் தலைமேல் சுமந்து கைங்கரியத்தில் ஈடுபட்டுவருகின்ற இந்த 25 வருஷகாலமாக ஸ்வாமிகள் திருவடியை அடியேன் அன்பு பக்தியுடன்பற்றிப் பழகிவந்த பழக்கத்தில்கண்ட அனுபவங்கள் சிலவற்றைத் தான் எழுதி முடித்தேன்.

அடியேன் அன்பு சிரத்தையுடன் சேகரித்த இந்த மலரை ஸ்ரீஸ்வாமிகள் திருவடிகளில் சமர்ப்பித்து நிற்கிறேன். ஸ்வாமிகள் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்ந்து எல்லோரையும் உய்விக்குமாறு பெருந்தேவித் தாயாரையும் தேவப்பெருமானையும் வணங்கி வழிபடுகின்றேன். ... ... ... •

—6—

# கவர்ந்து இழுக்கும் காந்த சக்தி

— ரமணீயன்.

சில மாதங்களுக்கு முன்னால் சென்னை டெலிவிஷனில் ஒரு ப்ரவசன நிகழ்ச்சி ஏற்பாடாகியிருந்தது. அரைமணி நேரத்துக்கு ஏற்பாடாகியிருந்த அந்த சத்கதா காலட்சேபத்தைப் பலபேரும் கண்டு கேட்டு மெய்மறந்து இன்புற்றுக்கொண்டிருந்தார்கள். உபன்யாசகருக்கும் சரி, அவர்வாக்கைச் செவிமடுத்துக்கொண்டிருந்த ரஸிகப் பெருமக்களுக்கும் சரி, காலம் கடந்ததேதெரியவில்லை. அவர் மெய்ம்மறந்து சொல்லிக் கொண்டிருந்தார். எல்லாரும் சுற்றம் சூழல் என்கிற பிரக்ஞையே இல்லாமல் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அன்னாருடைய திவ்ய வாக்கின் அர்த்தம், த்வனி, லாகவம் இவை எல்லாரையுமே ஓர் அபூர்வமான கட்டுக்குள் வைத்து மயக்கிக் கொண்டிருந்தது. சட்டென்று ப்ரவசனம் நின்று விட்டது! சொல்லிக் கொண்டிருந்த விஷயம் ஓர் இடத்தில் முற்றுப்பெருமலேயே நிறுத்தப்பட்டுவிட்டதுபோன்று தோன்றியது. நான் திடுக்கிட்டு சுய ப்ரக்ஞை அடைந்தேன். இது கால பரியந்தம் பெய்துகொண்டிருந்த மதுவர்ஷம் நின்று போனாற்போல ஒரு ஆதங்கம், ஏமாற்றம் நிறைவின்மை. இந்த நிகழ்ச்சி நடந்து முடிந்த நாலு நாட்களுக்குப் பின்னால் டெலிவிஷனில் இன்னொரு நிகழ்ச்சி நடந்தது. அந்தத் தொலைக்காட்சியைப் பார்க்கிற ரஸிகர்கள் எழுதும் கடிதங்களை வாசிக்கிற நிகழ்ச்சி அது. அந்த நிகழ்ச்சியின்போது பலப்பல ரசிகப் பெருமக்கள் முன்னால் நடந்த சத்கதாகாலக்ஷேபத்தைப்பற்றிக் குறிப்பிட்டுக் கடிதம் எழுதியிருந்தார்கள். கடிதம் எழுதியிருந்த எல்லாருமே என்னைப்போல் ஏமாற்றம் அடைந்தவர்கள்தாம், "அதெப்படி நிகழ்ச்சியைப் பாதியில் நிறுத்தலாம்?" என்று சிலபேர் சாடியிருந்தார்கள். "மிகப் பெரியவர் ஒருவர் காலக்ஷேபம் நிகழ்த்துகிறார். எல்லாரும் ஸ்வய ஞாபகமே இன்றிக் கேட்கிறோம். அந்த நிகழ்ச்சிக்கு இன்னும் பத்து நிமிஷ அவகாசம் தந்தால் என்ன? ஏன் பாதியில் நிறுத்திவிட்டீர்கள்?" என்று பலபேர் கடிந்து எழுதியிருந்தார்கள். அடடா! எத்தனைபேர்! டெலிவிஷன் நிலையத்தார்கள் நன்றாக அகப்பட்டுக் கொண்டார்கள். என்ன பதில் சொல்லப் போகிறார்கள் பார்க்கலாம் என்று நான் காத்துக் கொண்டிருந்தேன்.

இன்னும் இரண்டு நிமிஷம் அவகாசம் கொடுங்கள் முடித்துவிடுகிறேன் என்று ப்ரவசனம் நிகழ்த்தியவர் இரண்டு விரல்களை உயர்த்திக் காட்டியும்கூட டெலிவிஷன்

நிலையத்துக்காரர்கள் அவகாசம் தராதது தவறு என்றும் சிலர் கோபத்துடன் எழுதியிருந்தனர். எல்லாக் கடிதங்களையும் படித்து முடித்து விட்டுத் தொலைக் காட்சிக்காரர்கள் பதில் சொன்னார்கள்—"அன்று பிரவசனம் நடந்து கொண்டிருந்தபோது அதை நிகழ்த்தியவர் மெய்மறந்து சொல்லிக்கொண்டிருந்தார். அரை மணி நேரம் என்று ஏற்பாடாகியிருந்த அந்த நிகழ்ச்சி அதற்குமேலும் இரண்டு நிமிடம் நீடித்துவிட்டது. அதை அவருக்குத் தெரிவிப்பதற்காகவேண்டி, நிலையத்து அமைப்பாளர் தரையோடு தரையாகப் படுத்து ஊர்ந்து சென்று அன்னாரின் கால்களைத் தொட்டார். அவர் சட்டென்று சுயநினைவுக்குவந்தார். நிலையத்தார் இரண்டு நிமிடம் அதிகமாகிவிட்டதை சைகையால் உணர்த்தவும் 'இரண்டு நிமிடம் அதிகமாகிவிட்டதா?' என கிற பாவனையில் இரு விரல்களை உயர்த்தி வினவியபடியே அத்துடன் ப்ரவசனத்தை முடித்துக்கொண்டுவிட்டார் அவர். நாங்கள் பாதியில் நிறுத்துவோமா?" என்று நிலையத்தார் பதில் சொல்லியிருந்தார்கள். கேள்வி கேட்ட நேயர்களுக்கு ஓரளவு ஆறுதல் கிடைத்தது.

அவ்வளவு நேயர்களையும் கவர்ந்திழுத்துக்கொண்ட அந்தப் பெரியவர் யார்? என்று நான் சொல்ல வேண்டுமா என்ன? அவர் தான்—பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள். எண்பத்தேழு வயதுக்குரிய குரலா அது? கணீர்என்னும் வெண்கலத்வனி! மிகவும் ஸ்வாரஸ்யமான உபாக்கியானங்கள். இடையிடையே நகைச்சுவை. அந்தத் துணுக்குகளைச் சொல்லுகையில் தாமே அவைகளை ரசிக்கிறதால் முகத்திலே ஏற்படுகிறவிகசிப்பு. பாசுரங்களிலிருந்து ஆங்காங்கேமேற்கோள்கள்

ஸ்வாமிகளின் பேச்சைக் கேட்கும்போது ஒரு ஸங்கீதக் கச்சேரி கேட்கிற அனுபவம் ஏற்படும். பிசிறில்லாத அத்புதமான சங்கீதம். சுநாதத்தின் உச்ச எல்லை. தாலத்துக்கும் லயத்துக்கும் கட்டுப்பட்டு ஒவ்வொரு சொல்லும் வெளிப்படும். அந்த சங்கீத சாகரத்திலே எல்லாரும் குளிக்கலாம். களிக்கலாம். இத்தனை வருடங்களாய் ஸ்வாமிகள் ஆற்றிவரும் பணிக்கு நல்ல ப்ரயோஜனம் ஏற்பட்டிருப்பதை நாம் கண் கூடாகப் பார்க்கலாம். இப்போதைய சுவாமிகளுக்கும் யுவதிகளுக்கும் பக்தியிலே ஈடுபாடு ஏற்பட்டிருக்கிறது. வேறு நானாவிதமான அசத்தான விஷயங்களிலே ஈடுபட்டிருந்த பல இளைஞர்கள் இப்போது பகவத் விஷயத்தில் சுசிருசிகளைத் தெரிந்து கொண்டுவிட்டார்கள் பக்தி சம்பந்தமான புஸ்தகங்களை இப்போது வாசிக்க ஆரம்பித்து விட்டார்கள். இதற்கெல்லாம் காரணம் ஸ்வாமிகளும், அவரைப்போன்றவர்களும் இடைவிடாது நடத்திவருகிற ஆன்மீக வேள்விதான். அப்போதைய காலம் ஒரு மயக்கமான காலமாக இருக்கிறது. "இதுவா-அதுவா"? என்கிற குழப்பம் எல்லாருக்கும், எல்லா விஷயத்திலும் எங்கேயும் இப்போது ஏற்பட்டிருக்கிறது. இந்த மயக்கத்தைத் தீர்க்க ஸ்வாமிகளது ப்ரவசனங்களும், ப்ரசுரங்களுமே உதவமுடியும் அவைகளோ, குழம்பும் மனங்களைத் தெளியவைத்து, போகவேண்டிய சரியான பாதை எது என்பதைச் சுட்டிக்காட்டி, நல்தழிப்படுத்த வல்லவையாகும்.

ஒரு வழிகாட்டி, ஒரு ஆசார்யன், ஓர் ஆசான் இப்போது மிகவும் அவசியமாக தேவைப்படுவதால் ஸ்வாமிகளுடைய டணிக்கு இது மிகவும் ஏற்புடைய காலமாகும். பன்னெடுங்காலம் நமக்கு உற்ற துணையாய், கலங்கரை விளக்காய் ஸ்வாமிகள் விளங்கிவர வேண்டுகிறேன். ... ... ...

# உபந்யாஸ கண்டீரவம்

(ஸ்ரீமதுபயவே. R. V. சேஷாத்ரி ஐயங்கார், அட்வகேட், சென்னை.)

லோகமான்யரான நம் காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிக்கு, பலவாண்டுகளுக்கு முன்பு ஸ்ரீரங்கத்தில் ப்ரபல வித்வான் ஸ்ரீ மெய்யுவய்யங்கார் ஸ்வாமி "உபந்யாஸ கண்டீரவம்" என்ற ஒரு பிருதை வழங்கினர். "உபந்யாஸம் செய்வதில் தலைசிறந்தவர்" என்பது அந்த பிருதின் தேர்ந்தபொருள். சுமார் முக்கால் நூற்றாண்டு காலமாக நம் ஸ்வாமியின் உபந்யாஸங்களை நம் நாட்டின் பல்வேறு பகுதிகளிலுள்ள பல்லாயிரக்கணக்கான மக்கள் பல மொழிகளில்கேட்டு ஆனந்தித்து வருகின்றனர். நம் ஸ்வாமியின் அபாரமான உபந்யாஸ சக்தியின் சில அம்சங்களை இங்கு விமர்சிப்போம்.

ஸ்வாமி ஒரு மாமேதை; அவருடைய ப்ரதிபை ஒரு ரத்னத்தைப்போல் பஹுமுகமானது. ரத்னத்தின் ஒவ்வொரு முகமும் ஒளியை இழுத்து ப்ரதிபலிப்பதுபோல், ஸ்வாமியின் ப்ரதிபையும் பல்வேறு விஷயங்களை க்ரஹித்து உபந்யாஸத்தின் மூலம் கேட்போர் பிரமிக்கும்வண்ணம் வெளியிடும் இயல்பையுடையது. ஏராளமான நூல்களைக்கற்று, மனத்தில்தரித்து, உபந்யாஸங்களின் வாயிலாக விஷயங்களை வாரிவழங்கும் தன்மை நம் ஸ்வாமிக்கே அஸாதாரணமான சக்தியாயமைந்துள்ளது.

மேனாட்டு இலக்கிய வல்லுநர்கள் அறிவியலை சாஸ்திரம் (ஸயன்ஸ்) என்றும், கலை (ஆர்ட்) என்றும் இருபெரும்பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். சாஸ்திரம் என்பது விஷயங்களைப் பலவாறாக முடிந்தமட்டும் பிரித்து அவற்றின் நுட்பங்களை ஆராய்ந்தறியும் பாங்காகும். இப்பாங்கை அனலஸிஸ் (analysis) என்பர்கள்; இச்சொல்லுக்கு 'பிரித்தல்' என்று பொருள் கலை என்பது பல விஷயங்களை ஒன்று சேர்த்து அச்சேர்க்கையின் ரஸத்தை யனுபவிக்கும் பாங்காகும். இப்பாங்கை ஸிந்தஸிஸ் (synthesis) என்று கூறுவார்கள். இச்சொல்லுக்கு 'சேர்த்தல்' என்று பொருள். அந்த சித்திரக்கலையில் பல வர்ணங்களின் சேர்க்கை ஆனந்தத்தைக் கொடுக்கிறது. அதனால்தான் அது கலையாகிறது அறிவுக்கு சாஸ்திரமும், ரஸானுபவத்திற்குக் கலையும் இன்றியமையாதவை.

நம்முடைய பூர்வாசாரியர்கள் சாஸ்திரங்களைப் பாகுபாடுசெய்து, அவற்றிலுள்ள விஷயங்களைப் பலவாறாகப் பிரித்து, அவற்றின் நுட்பங்களை ஆராய்ந்து நமக்கு விளக்கியுள்ளனர் ஸ்ரீவசனபூஷணம், தத்வத்ரயம், அர்த்தபஞ்சகம் முதலியவை இதற்குப் பெரிய சான்றுகளாகும். ஆகவே இந்த க்ரந்தங்கள் சாஸ்திரக்கிரந்தங்களாகும். மற்றொருபுறத்தில் பகவத் விஷயத்தை எடுத்துக்கொள்வோம். அதில் பல ச்ருதிகள், ஸ்மிருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள், சாமான்யசாஸ்திரங்கள், காவ்யங்கள், ஆசார்ய ஸ்ரீஸூக்திகள் இவையெல்லாவற்றையும் ஒன்று சேர்த்து ஒரு சைத்ரிகன் கொடுக்கும் அருமையான பல வர்ணச்சித்திரம்போல் ஒரு சிறந்த கலைப் பொக்கிஷமாக ரஸானுபவத்திற்கு ஈடும் இணையும் இல்லாதவகையில் நம் பூர்வாசாரியர்கள் நமக்களித்துள்ளனர். அந்த வழியில் வந்த நம் ஸ்வாமி தம் உபந்யாஸங்களில் சாஸ்திரக் கிரந்தங்களிற்போலவே அறிவதற்கும், அநுபவிப்பதற்கும் ஏற்றவாறு

சாயை இரண்டும் ஒருங்கே காணப்படும்படி ஏராளமான விஷயங்களை வாரிவழங்குகிறார். அவை முழுவதையும் பூர்ணமாக அனுபவிக்கும் சக்தி பலபேர்களுக்கில்லை. இருக்கும் சிலரும் ஒவ்வொரு விஷயத்திலேயே ஆழங்காற்பட்டு முழு விஷயங்களையு மனுபவிக்க வழி தெரியாமல் சிரமப்படுகின்றனர். அவர்களுக்கு பட்டரின் ஸ்ரீஸூக்தி யொன்று வழிகாட்டியாயமைந்துள்ளது. அதைக்கொண்டு அவர்கள் ஸ்வாமியின் உபந்யாஸங்களைப் பூர்ணமாய் அனுபவிப்பார்களாக.

பெரிய பெருமாளின் திருமேனியழகை வருணிக்கும் பட்டரின் திருவாக்கில் ஒரு அருமையான சுலோகம் காண்கிறது. அது வருமாறு:

ஏகைகஸ்மிந் பரமவயவே நந்தஸௌந்தர்யமக்நம்
ஸர்வம் த்ரக்ஷ்யே கதமிதி முதா மாமதா மந்தசக்ஷு:!
த்வாம் ஸௌப்ராத்ரவ்யதிகரகரம் ரங்கராஜாங்ககாநாம்
தல்லாவண்யம் பரிணமயிதா விச்வபார்ண வ்ருத்தி.

ஓ மூடக்கண்ணே! "ஒவ்வொரு அவயவத்திலும் எல்லையில்லாத அழகிலே முழுகியிருக்கிற நான் எல்லா அவயவங்களையும் எப்படி அனுபவிக்கப்போகிறேன்?" என்று வீணாக சந்தேகப்படாதே பெரியபெருமாளுடைய அவயவங்களுக்கு நட்பின் தொடர்பை விளைவிக்கின்ற அந்த லாவண்யம் என்னும் ஸமுதாய சோபையானது உன்னை எல்லா அவயவங்களையும் பூர்த்தியாக அனுபவித்தவனாக நிறைவேற்றிவிடும். —இது சுலோகத்தின் நேரான மொழிபெயர்ப்பு. இதன் உள்ளர்த்தத்தைச் சற்று விளக்குவோம்.

வடிவழகில் இருவகையுண்டு; ஸௌந்தர்யமென்பது ஒன்று, லாவண்யமென்பது மற்றொன்று. தனித்தனி ஒவ்வோரவயவத்தின் அழகு ஸௌந்தர்ய மெனப்படும்; எல்லா அவயவங்களினுடையவும் சேர்க்கையில் தோன்றுமழகு [ஸமுதாய சோபை] லாவண்யமெனப்படும் பெரிய பெருமாளுடைய ஓரவயவத்திலே கண்வைத்தால், மறுபடியும் கண்ணை அதில் நின்றும் திருப்பி வேறோரவயவத்தில் செலுத்த முடியாமல் ஒன்றிலேயே கண்பதிந்துபோகும்படி யிருக்கும் எல்லா அவயவங்களையும் முழுக்க அனுபவிக்கவேணுமென்று பாரிக்கும் தம் கண்ணை விளித்து பட்டர் தேறுதல் கூறுகிறார்—"கண்ணே! நீ கவலைப்படவேண்டா; பெரியபெருமாளுடைய ஒவ்வொரு அவயவமும் உன்னைத் தன்னிடத்து ஆழங்காற்படுத்திப் பக்கநோக்கறியவொட்டாமே செய்து விடுமென்பது உண்மையே; ப்ரத்யங்கசோபை அப்படிச்செய்து விட்டாலும், லாவண்யமென்கிற ஸமுதாய சோபை உன் விருப்பத்தைப் பூர்த்திசெய்து வைக்கும்; அது எல்லா அவயவங்களையும் தொடர்ந்ததொரு ஸூத்ரம் போன்றிருப்பதால், ஒரு அவயவத்தில் நின்றும் மற்றோரவயவத்திற்கு மெல்லமெல்ல உன்னைக் கொண்டுபோய் முறையே எல்லா அவயவங்களையும் பூர்ணமாக அனுபவிக்கச்செய்யும். ஆகையால் நீ கலங்காதே" என்று தேறுதல் கூறி, தாம் அந்த லாவண்யத்தையே வழிகாட்டியாகக்கொண்டு பெரியபெருமாளுடைய ஸர்வாவயவங்களையும் அனுபவிக்கிறார் பட்டர்.

இதே ரீதியில் நாம் நம் ஸ்வாமியின் உபந்யாஸ சாதுர்யத்தை அனுபவிக்கிறோம். ஸ்வாமியின் மேதா விலாஸம் பெரியபெருமாளுடைய திருமேனிபோன்றது.

அதன் பல்வேறு ஆற்றல்கள் அத்திருமேனியின் அவயவங்கள் போன்றவை, உபந்யஸித்தல், உரைகளெழுதுதல், கவனம் செய்தல், வியாஸங்களியற்றுதல் (இவை நான்கு பாஷைகளில்) வேத ஆராய்ச்சி, சாமான்ய சாஸ்திரங்களில் தேர்ச்சி, பகவத் விஷயஞானம், ஸம்ப்ரதாய விஷயப்ராவீண்யம், பன்மொழித்தெளிவு, வாதநைபுண்யம், கற்றவை முழுதும் தரித்தல் முதலிய பலவாற்றல்கள் ஸ்வாமியின் நிகரற்ற மேதாவிலாஸத்தின் அவய்வங்களாகும். இவற்றுள் ஏதேனுமொன்றையனுபவிக்கப் புகும் நம்முடைய ஞானக்கண் அது ஒன்றிலேயே ஆழங்காற்பட்டு மற்றொன்றில் செல்லாமல் நிற்கும். அப்போதுதான் ஸ்வாமியின் மேற்கூறிய ஆற்றல்களுக்குள்ள அந்யோன்யபாவம் நம் ஞானக்கண்ணை அடுத்தடுத்து வரும் பல்வேறு விஷயங்களுக்கு எடுத்துச் சென்று முழுவதிலும் ஈடுபடுத்தி ஸ்வாமியின் உபந்யாஸத்தை பரிபூர்ணமாக அனுபவிக்கச் செய்யும். ஆகவே ஸ்வாமியின் ஒவ்வொரு ஆற்றலின் பெருமையும் ஸௌந்தர்யஸ்தானத்திலும், உபந்யாஸசாதுர்யம் லாவண்யஸ்தானத்திலும் இருந்து ச்ரோதாக்களை ஸ்வாமியின் உபந்யாஸங்களை முழுமையாக அனுபவிப்பிக்கின்றன. ஸ்வாமியின் உபந்யாஸப் பாங்கு மேலே கூறப்பட்ட பட்டர் சுலோகத்தின் ஸ்வாபதேசம் போலும்! ஆகையால் உபந்யாஸ கண்டீரவம் என்னும் பிருது நம்ஸ்வாமியொருவர்க்கே ஏற்கும்.

*By*

Madras
10—3—78

**R. V. SESHADRI, Advocate,**
**Egmore, Madras.**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

## அண்ணா ஸ்வாமியின் அநந்தகல்யாண குணங்கள்

**இளையவில்லி பூவராஹாசாரியர், M. A.,** (ஞானப்பிரான்) பெங்களூர்.

ஸ்வாமி எம்பெருமானார் யாதவப்ரகாசரிடம் பூர்வபக்ஷமான அத்வைத க்ரந்தம் வாசியா நிற்க, அவன் ச்ருதிகள் சிலவற்றுக்குச் சொன்ன அர்த்தங்கள் ஸ்வாமி திருவுள்ளத்தைப் புண்படுத்த அவைகளைத் தவிர்த்து நம் ஸ்வாமி இன்சுவைமிக்க அர்த்தங்களைப்பொழிய, இது கேட்டிருந்த பெருமாள்கோயில் பெரியோர்கள் திருவரங்கம் திருப்பதியேறச் சென்று, அக்காலம் ஆசார்யபதம் நிர்வஹித்துப்போந்த ஆளவந்தாரிடம் அறிவிக்க, அதுகேட்டு விஸ்மிதராய் அவரும் திருவாய் மலர்ந்தருளிய ச்லோகரத்நம் வருமாறு:

"அஸந்த ஏவாத்ர ஹி ஸம்பவந்தி ஹஸந்திகாயாம் இவ ஹவ்யவாஹா:,
அத்ரைவ ஸந்தோ யதி ஸம்பவந்தி தத்ரைவ லாபஸ் ஸரஸிருஹாணாம்".

இவ்வுலகின்கண் அஸத்துக்கள்தான் கரியடுப்பில் நெருப்புப்போலே பிறக்கிறார்கள்; இங்கேயே ஸாதுக்கள் சிலர் தோன்றுவர்களானால் அந்நிகழ்ச்சி இத்தளத்திலே தாமரை பூத்தாற்போலேயாம் என்றது. அப்படி எம்பெருமானாரைக் குறித்து ஸ்வாமி யமுனைத் துறைவராலே உரைக்கப்பட்ட ச்லோகரத்னம்தான் நினைவுக்கு வரும் நம் அண்ணா ஸ்வாமியை ஸேவிக்கும்போதும். ஆழ்வார்களுக்கும் ஆசார்யர்களுக்கும் அவர்களுடைய ஞானம், பக்தி, வைராக்யம், இவைகளாலேயே பெருமை. அதே

போன்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனைவர்க்கும் அவர்கள் தம் ஞான பக்தி வைராக்யங்களாலேயே பெருமை. இவைகளைக்கொண்டே அவர்கள் கௌரவிக்கப்படுகிறார்கள்

நம் ஸ்வாமியும் இவைகளுக்கு எல்லாம் சிறந்த கொள்கலனாய், வல்லனையே னையும் ஈர்கின்ற குணங்களை யுடையவராய்த் திகழ்ந்து வருவது நெஞ்சால் நினைப்பரிதால். "உன்து பாலேபோல் சீரில் பழுத்தொழிந்தேன்" என்றார் ஆழ்வாரும். அப்படிப்பட்ட கல்யாணகுணஸாகரத்தில் சில திவலைகளை வாய் வெருவுதன் மூலம் பிறவிப் பயன் பெறவும் நாப் படைத்தபயன் பெறவும் விழைகின்றேன்.

"தானே எழுதிய தன் சரிதை" நூலை ஜம்பூத்வீபே, பாரதவர்ஷே பரதகண்டே காணுதார் யாருமில்லை. அதில் நம் ஸ்வாமி தமக்கு வாய்த்த ஆசிரியப் பெருந்தகைகளைப் பற்றியும், வித்யாப்யாஸம் பற்றியும், சூர்க்கத்திப்பரீக்ஷை முதலியவைகளில் பெற்ற தேர்ச்சிப்பற்றியும் விரிவாக எடுத்துரைத்துள்ளார். அதிலிருந்து வேதமும், இதிஹாஸபுராணங்களும், ஆழ்வார்கள் அருளிச்செயல்களும், ஸாமாந்ய சாஸ்த்ரங்களும் இவர் இட்ட வழக்காயிருக்கும் என்றறிகிறோம்.

"ஓது வாய்மையும் உவனியப்பிறப்பும் உனக்குமுன் தந்தவந்தணனொருவன்" என்ற பெரிய திருமொழிப்பாசுரத்தின் வ்யாக்கியானத்தில் வியாக்கியான சக்ரவர்த்தியான் பெரியவாச்சான்பிள்ளை "ஒருவன்" என்ற பதத்திற்கு கீழ்க்கண்டவாறு உரையிட்டருளுகிறார்; (அதாவது —

"முற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸபுராணுதிகளையும் அதிகரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளையும் அதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப்போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே 'ஒருத்தன்' என்கிறது"—என்று.

இதில் நம்பிள்ளை என்ற மஹாசார்யருக்கும், கண்ணனுக்குக் கல்வியளித்த ஸாந்தீபனி முனிவருக்கும் ஒற்றுமை காட்டப்பட்டது. "மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையாக் கேட்ட ஸாந்தீபநி நம்பிள்ளையின் ஞானபக்திவைராக்யங்களையுடையவனு? என்றாராய்ந்தால், நிச்சயம் அவன் நம்பிள்ளைக்கு எவ்விதத்திலும் ஸமம் ஆகமாட்டான். ஆனாலும் உவமை கூறும்போது, உபமான வஸ்து உபமேயத்தைக் காட்டிலும் பலபடி உயர்ந்ததாகவே இருக்குமாதலால் பெரியவாச்சான்பிள்ளை இப்படிக் கூறினார். அனால் நம்பிள்ளையைப் போலே, ஞானநிதியாய், வைராக்ய ராசியாய், பக்திஸாகரமாய் அஸ்மிந்லோகே (இவ்வுலகில்) ஸாம்ப்ரதம் (இக்காலம்) விண்ணுளாரிலும் சீரியராய் நம்மிடையே, (நாம் செய்த புண்ணியங்களின் பலனே, அருளாளன் புரிந்த அருந்தவப்பயனே அறியோம்), எழுந்தருளியிருப்பவர் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி ஒருவரே யென்று அறிவில்லியான அடியேனுங்கூட சபதம் செய்து கூறும்படியன்றோ உள்ளது.

திருத்துழாய் முளைக்கும்போதே மணத்துடன் முளைக்குமாபோலே கருவரங்கத்துள் கிடந்தே திருவரங்கமேயான் திசையைக் கை தொழுதவர் நம் ஸ்வாமி. அவதார காலமே தொடங்கித் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளர். உலகில்

ஸ்ரீவைஷ்ணவகுலத்தில் பிறந்த ஆண்கள் அனைவருக்கும் "ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபனாசார்ய உபயவேதாந்த ஆசாரியர்" என்ற பட்டம் சூட்டப்படுகிறது. இஃது ஸ்ரீ உ வே என்று சுருங்கும். இது என்போலவென்னில். சில மஹர்ஷிகளுக்கு 'பகவான்' என்ற சப்தம் பிருதாக அமைகிறதே அதே போல. பகவச்சப்த விசேஷணம் ஸ்ரீமந் நாராயணன் ஒருவனுக்கே தகும் மற்றைப்பேர்கள் விஷயத்தில ஔபசாரிகமாக (out of regard) ப்ரயோகிக்கப்படுகிறது அத்தனை போக்கி வாஸ்தவமாக ஆகுமோ அன்னவர்கள் விஷயத்தில்? அதேபோன்று நம் ஸ்வாமிஒருவர்க்கே ஸ்ரீஉவே பரிபூர்ணமாகப பொருந்தும் அடைமொழியாகும். நம் ஸ்வாமி கல்விக்கடல். அறியவேண்டுமர்த்தமெல்லாமறிந்தவர். அறியாக்காலத்திலிருந்தே அத்திகிரி அருளாளனுக்குத் தொண்டுபூண்டமுதமுண்பவர். நம் ஸ்வாமி ரஸமாக ஸாதிக்கும் வார்த்தை யொன்றுண்டு. "காஞ்சீபுரத்தில் நான் ஒருநாளும் திவ்யப்ரபந்த கோஷ்டியைத் தெண்டனிட்டது கிடையாது" என்று. இதன் உள்ளர்த்தத்தை மந்தபுத்திகள் உணராது. நம் ஸ்வாமி வாசலில் எழுந்தருளும் இயல் கோஷ்டியைக்கூட ஸேவிக்கமாட்டார் போலும் என்று விபரீதக் கற்பனைகளைத் தம் நெஞ்சில் விரிபபர்கள். ஸ்வாமியையும் அவர்தம் திருக்கல்யாண குணங்களையும் நன்கு அறிந்த பாக்யசாலிகளும், கூடப்பழகும் அன்பர்களும், காஞ்சீவாஸிகளும் இந்த ரஸோக்தியை அறிந்து அகமகிழ்ந்து ஆனந்தக்கூத்தாடுவர். அதாவது, பேரருளாளன் இயல் கோஷ்டிக்கு ஒருநாளும் தவறாமல் அந்வயிப்பதுமட்டுமல்லாமல், பெருமாள் புறப்படுவதற்கு குறைந்தபக்ஷம் அரை மணிக் காலம் முன்னதாகவே எழுந்தருளிக் காத்திருப்பவர் நம் ஸ்வாமி. பேரருளாளன் எழுந்தருள அவனை ஸேவித்து கோஷ்டி ஆரம்பமாகும்போதே "ஸ்ரீசைலேச தயாபாத்ரம்" என்று "மரங்களுமிரங்கும் வகையிலும்" கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" என்னும் படியும் தமது கம்பீரமான திருமிடற்றாலே ஆரம்பிப்பவர் நம் ஸ்வாமியே. கோஷ்டி முடிவுபெறும்வரை அந்வயித்து சாற்றுமுறைசெய்து திருமாளிகைக்கு எழுந்தருளும் அழகு கண்படைத்தார் காணவேணும். ஆகவே இவர் கோஷ்டியை இடையில் ஸேவிக்க ப்ரஸக்தியே இல்லை.

ஆழ்வார்களின் ஈரச்சொற்களில் ஸ்வாமியின் நெஞ்சுகனிந்த அநுபவம் மற்றையார்க்கு இக்காலத்தில் கிடைப்பது அரிது. மதராஸில் மார்கழிமாதத் திருப்பாவை உபந்யாஸத்தில் சாற்றுமுறையன்று ஆண்டாள் திருக்கல்யாணம் பற்றி உபந்யஸிக்கும்போது "ஒருமகள் தன்னையுடையேன், உலகம் நிறைந்த புகழால் திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால் தான்கொண்டு போனான்" என்ற பாசுரத்தை (ஆண்டாளின் தாயார் பாவனையடைந்த நம் ஸ்வாமி) இரும்புபோல் வலிய நெஞ்சம் இறையிறை யுருகும் வண்ணம் நாத்தழுதழுக்க அநுஸந்திப்பது, நெஞ்சுருகிக்கண் பனிப்ப நிற்கும்நிலை, பக்தர்கள் நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நின்று நீங்காததொன்றாகும்.

பராசரபட்டர் அருளிச்செய்ததாக திருப்பாவை "சிற்றஞ் சிறுகாலே" பாசுரவ்யாக்யானத்தின் முடிவில் நம் பேராசிரியர்கள் கூறுவதொன்றுண்டு. "விடிவோரை எழுந்திருந்து முப்பது பாட்டையும் அநுஸந்தித்தல், மாட்டிற்றிலனாகில் "சிற்றஞ்சிறு காலே" என்கிற பாட்டை அநுஸந்தித்தல், அதுவும் மாட்டிற்றிலனாகில் நாம் இருந்த இருப்பை நினைப்பது" என்று. பட்டர் திருப்பாவை அநுஸந்தான காலத்தில் எழுந்

தருளியிருக்கும் இருப்பை இக்காலத்தவர்கள் கண்ணால் காணவேணுமெனில் நம் ஸ்வாமியை திருப்பாவை காலக்ஷேப கோஷ்டியில் ஸேவித்தால் போதும். மேற் சொன்ன ஸ்ரீஸூக்திகளின் வ்யாக்யான ரூபமாக எழுந்தருளியிருப்பர் நம் ஸ்வாமி. அதாவது:—"ஆஹ்லாத சீதநேத்ராம்பு:.........ஸர்வதே ஹிபி: (குளிர்ந்த கண்ணநீர் பெருக, மயிர்க்கூச்செறிய. பரனான எம்பெருமானின் கல்யாண குணங்களை அநவரதமும் அநுஸந்தித்துப்போரும் ஸ்ரீவைஷ்ணவன் எல்லோராலும் ஸேவிக்கத்தகுந்தவன்) அருளிச்செயல்களிடத்துள்ள இந்த விஞ்சிய காதலே காரணமாக அவைகளைச் சிதைப்போரிடத்துச் சீறியருள்வர் நம் ஸ்வாமி. நம் ஸ்வாமிக்கு எவரிடமும் எந்த விரோதமும் கிடையாது "ஸர்வபூதேஷு கோஹித:? என்றால் "நம் ஸ்வாமியே" என்று கூறவேண்டும். எல்லோரிடத்தும் உண்டான ஹித புத்தியாலேயே, எந்த விதச் சிறுபிழைகளையும் கண்டவிடத்திலேயே கண்டித்துத் திருத்தியருள்வர். உண்மையில் இவர் செய்தருளும் உதவி மிகச் சீரிய ஆத்மோஜ்ஜீவனம். உதவி பெற்றவர்கள் கைம்மாறு காணாமல் தெகுடாடி நிற்கவேண்டியிருக்க "சேஷம் கோபேநபூரயேத்" என்கிறபடியே பழித்துத் திரிவது அவசியம் ப்ரக்ருதிவச்யதையையே காட்டும். ஆனால் இவர்கள் பழிக்கில் நம் ஸ்வாமிக்குப் புகழேயாம்."

இப்படிப்பட்ட ஞானநிதியானாலும் "பால்யேந திஷ்டாஸேத்" என்றபடி சிறுவர்களுடனும் கலந்து இன்பமாகப்பேசி ஆநந்தரஸமநுபவிக்கும் அழகு அநுபவித்தவர்களுக்கே தெரியும் சிறுவர்கள் பன்னிரு திருமண்காப்பு இட்டுக்கொள்வதைக் காண ஸ்வாமிக்கு மிகுந்த ஆனந்தம் ஏற்படும். தம்முடைய விலையுயர்ந்த வெள்ளி திருமண்பெட்டியை அவர்கள் உபயோகிக்க அநுமதிப்பர். "பிஞ்சில் பழுத்த" சில சிறார்கள் திருமண்பெட்டியே மிகுதியாம்படி மற்றவைகளைத் தங்களுடைமையாக்கிக் கொள்வர்கள். இதையறியும் ஸ்வாமியின் திருமுகத்தில் சிறிதும் விகாரமேற்படாமல் "செய்தாரேல் நன்று செய்தார்" திருமண் இட்டுக்கொள்கிறார்களே. அதுவேபோதும் என்றுகந்திருப்பர்.

தாமரையிலைத் தண்ணீர்போலே ஒட்டற்றுப் பற்றற்று இருக்கும் மாஞானி இவர். குடும்பத்தில் உண்டாகும் லாப நஷ்டங்களோ, சுகதுக்கங்களோ இவரை எள்ளளவும் பாதிக்காது. பொருளை ஓர் பொருட்டாக மதிப்பவர் அல்லர். ஸத்க்ரந்த ப்ரகாசனங்களின் மூலமும் காலக்ஷேபங்கள் மூலமும் கிடைக்கும் ஸகலத்தையும் பகவத் பாகவத கைங்கர்யங்களுக்கே அர்ப்பணிப்பவர் வைதிக பக்ஷபாதி. வைதிகர்களிடத்தில் கலாபேதம் ஸ்மார்த்த வைஷ்ணபேதம் இத்யாதிகள் இல்லாமல் எல்லோரையும் ஆதரிப்பவர்—இவரை நன்கு அறியப்பெறாத பாக்யஹீநர்கள் "பிரதிவாதி பயங்கரர்" அன்றோ! என்று சொல்லி விலகிப்போவார்கள். அபார்த்தம் சொல்லும் பிரதிவாதிகள் யாராயினும் அவர்கட்கே பயங்கரர். நரசிம்மன் ஹிரண்யனுக்குப் பயங்கரனாகவும் ப்ரஹ்லாதனுக்கு அருள்நோக்குடையவனாகவும் திகழ்ந்தானே- இற்றைக்கும்இவர் தம்திருமாளிகையில் வருடந்தோறும் நடைபெறும் மீனவிசாகபாராயண கோஷ்டிகளில் மூன்று மதங்களையுஞ் சேர்ந்த வைதிக ஸார்வபௌமர்களைக் கூட்டம் கூட்டமாய்க் காணலாம்—வெகுகாலம் தம் திருமாளிகைக்கு அருகில் இரண்டு மூன்று ஸ்மார்த்த குடும்பங்களைப்பிரதிதினம் காலை திருவீதிகளில்ஸாமவேதபாராயணம் செய்

வதின் பொருட்டு இவர் ஆதரித்துவந்ததை அடியேன் அறிவேன். இப்படி எண்ணில் பல் குணங்களையுடைய மஹான் அவதரிப்பது அபூர்வம்; அப்படி அவதரித்த இவரிடத்தில், பதார்த்த தரிசனத்திற்காகவிருக்கும் விளக்கில் விட்டில் பூச்சிகள் விழுந்து மாளுவதுபோல் மாளாதே, நீர்குடிக்கக் கல்லின ஏரியிலே கல்லைக்கட்டிக் கொண்டு விழுந்து சாவாரைப்போலே சாவாதே இவர்தம் திருவடி நிழலை ஆச்ரயித்து வாழ்வதே ப்ராப்தம். இப்படி வாழும்படி அடியேனை அறியாக்காலத்துள்ளே பெருங் கண் மலர்ப்புண்டரீகம் ஒருங்கே பிறழவைத்த பெருங்கேழலாரை நினைத்து "இல்லை யெனக்கெதிர் இல்லை எனக் கெதிர் இல்லையெனக் கெதிரே" என்று குணலையாடித் திரிகிறேன். இந்நிலை என்றும் மாருதிருக்குமாக. ... ... *

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாய நம:

**Dr, V. V. RAMANUJAM, M. A., M. Sc. Ph. D., (Tulane)**
**Professor of Inorganic Chemistry, University of Madras.**

ஸ்ரீமத்வேதமார்க்கேத்யாதிப்படி ப்ரதிஷ்டிதராய் எழுந்தருளியிருக்கும் நமது P. B. A. ஸ்வாமியின் எண்பத்தெட்டாவது மீனவிசாகத் திருநக்ஷத்திர தினத்தன்று எம்பெருமானார் திருவவதரித்த இந்த பிங்களவாண்டில் ஸ்வாமியைப் பாராட்டி ஒரு மலரினை நண்பர் ஸ்ரீமான் V N தேவநாதன் வெளியிட ஏற்பாடுசெய்ததுபற்றி என்னுடைய பெருமகிழ்ச்சியை முதலில் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நம்முடைய பாக்யவசத்தினால் எம்பெருமானார்போலே ஸ்வாமி நம்மிடையே எழுந்தருளியிருக்கிறார். ஸ்வாமியின் இந்த ஆண்டுத் திருநக்ஷத்திரத்தைக் கொண்டாடி ஒரு மலர் வெளியிடுவது மிகவும் பொருத்தமுடையதும் அவசியமானதுமாம்.

ஸ்ரீ வைஷ்ணவத்துக்கும் அதில் நமது ஸம்ப்ரதாயத்துக்கும் நமது ஸ்வாமி செய்துள்ள, செய்துகொண்டுவரும் தொண்டு வாசாமகோசரம். நமது பூர்வாசாரியர்கள் அருளிச்செய்துள்ள பல திவ்யக்ரந்தங்களையும் ரஸகனமான வியாக்யானங்களையும் நேரே ஸேவித்துப் பயனுறக்கூடிய அதிகாரிகள் மிகவும் குறைந்து கொண்டு வருகின்றனர். இந்த நிலையில் நம் ஸ்வாமி எளிய நடையில் யாவரும் புரிந்து பயன் பெறும்படி தெளிவாக ஸாதித்துள்ள வ்யாக்யானங்கள் மிக முக்கியமான ஒரு தேவையைப் பூர்த்தி செய்கின்றன. இவைகளை ஸேவித்துப் பிறகு பூர்வாசார்யக்ரந்தங்களை ஸேவித்தால் அவைகளைப் புரிந்துகொள்வது எளிதாகின்றது. ஆங்காங்கு உபந்யஸிக்க ஆரம்பிக்குமவர்களுக்கு பரமோபகாரகமாக உபந்யாஸஸௌபாக்யமாலைகளை அடிக்கடி நம் ஸ்வாமி வெளியிடுவது வித்வான்களுக்கும் உபகாரகமானதன்றோ?

நமது ஸ்வாமி பலதுறைகளிலும் அருளிச்செய்து வெளியிட்டுள்ள க்ரந்தங்களை பூர்ணமாக ஸேவிக்க ஒருபுருஷாயுஸ்ஸில் நம்மால் இயலாது இவைகளை ஸேவித்து

இன்புறவும் பயனுறவும் பலபிறவிகள் எடுக்க அமையும். மேலும் எம்பெருமானர் போலவே நமது ஸ்வாமியும் ஸத்ஸம்ப்ரதாய பாஹ்யகுத்ருஷ்டிகளை (அவர்களது க்ரந்தங்களை) தமது க்ரந்தங்கள் மூலம் நிரஸிப்பது பெரும் பணியாகும். இதற்காக வெளிவரும் க்ரந்தங்கள் மூலம் சர்ச்சைக்குரிய விஷயங்கள் பற்றி நம்மிடையே தெளிவு பிறப்பிக்கிருர் நம் ஸ்வாமி. பரமகாருணிகமான செயல் இது.

பெருமதிப்புக்கும் பக்திக்கும் பாத்திரமாகிய நமது ஸ்வாமியின் குணங்களில் குறிப்பாக எடுத்துக் கூற வேண்டியது அவருடைய ஸௌலப்யமே. "ஜநித்வாஹம் வம்சே" என்ற ச்லோகத்தின்படி உயர்ந்த குடியில் அவதரித்து எல்லாக்கல்வி களி லும் சிறப்புற்று, ஸதநுஷ்டான சீலராய், ஞான வ்ருத்தராயும் வயோவ்ருத்தராயும் விளங்கும் நம் ஸ்வாமி அரசினராலும் பெரிய வித்யா கலாச்சார ஸ்தாபனங்களா லும்,மஹாவித்வான், பத்மவிபூஷண, மஹாமஹோபாத்யாய போன்ற பெறற்கரிய பட்டங்களால் கௌரவிக்கப் பட்டவராயினும் தமது மேன்மைகள் எதையும் கணிசி யாது யாவருடனும் குழந்தையுள்ளத்துடன் பழகுவது எல்லாராலும் கொண்டாடப்படும் விஷயமாகும். திருமேனி மிகவும் தளர்வுற்றிருப்பினும் தாம் மேற்கொண்டுள்ள எழுத் துப் பணிகளை எம்பெருமான் அநிர்விண்ண; என்ற தன் பெயருக்கேற்ப சோர்வாமல் தன் படைப்பு, காத்தல்பணிகளைச் செய்துவருவதுபோல் ஸ்வாமி செய்துவருகிருர். ஆப்தர்கள் சென்னைக்கும் இதர இடங்களுக்கும் அழைக்கும் போது தம் சிரமங்களைப் பாராட்டாது எழுந்தருளி கூட்டங்களில் கலந்துகொண்டு ஸதுபதேசங்களைப் பண்ணி நம்மை வாழ்விப்பது அவருடைய ஸௌலப்ய ஸௌசீல்ய குணங்களுக்குப் பெரிய எடுத்துக்காட்டாகும்.

இன்னும் பலபல ஆண்டுகள் நமது ஸ்வாமி அரோக திடகாத்திரராய் நம் மிடையே இருந்து நம்மைவாழ்விக்கும்படி ஸ்ரீருக்மிணீஸமேத ஸ்ரீவேங்கடக்ருஷ்ணனை அருள் பாலிக்கும்படி நிச்சலும் ப்ரார்த்திக்கிறேன். Dr. வி. வி. **ராமாநுஜம்**, PHD.

# முடிவில் அடியேன் செய்யும் விண்ணப்பம்

எனது அன்பர்களிற் சிறந்த உயர்திரு. V. N. தேவநாதன் பல பெரியார்களிட மிருந்து வாங்கிவெளியிட்ட மதிப்புரைகளைப் பெரும்பாலும் வாசித்துக்காட்டக் கேட்டு இன்பமெய்தினேன். நம்மைப்பற்றிப் பெரியார்களின் திருவுள்ளம் மிகமிக உகந்திருக் கின்றதென்பதை அறிய, மகிழ்ச்சியுண்டாவது இயற்கைதானே. ஆனாலும் *ஆசம் ஸாயாம் பூதவச்ச* என்கிற வடமொழி வியாகரண ஸூத்ரத்தை நினைத்து இவை யெல்லாவற்றையும் ஆசீர்வாதமாகவே கொள்ளுகிறேன். ஸம்பிரதாயத்திற்குத் தொண்டு செய்ய மேன்மேலும் ஆசையே விஞ்சியுள்ளது. தாஸன் P. B. A.



ஸ்ரீரஸ்து

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

    

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# பிங்களவத்ஸர ஸ்ரீராமாநுஜ விஜயம்

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் மஹாவித்வான் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

**பிங்களவத்ஸரஸமாப்தி நினைவு மலராகத் தொகுத்தது.**

ப்ரபவாதி ஷஷ்டிஸம்வத்ஸரங்களினிடையே பிங்களவாண்டில் *சித்திரையில் செய்ய திருவாதிரையெனும் நாற்றிசையுங் கொண்டாடும் நன்னாளில் திருவவதரித்தருளின எம்பெருமானாருடைய பலவகைப்பட்ட ப்ரபாவங்களை அடியேன் ஸ்ரீராமாநுஜனெனும் மாதப்பத்திரிகையின் மூலமாகவும் ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு பாஷைகளிலான பல புத்தகங்கள் மூலமாகவும் கீழ்க்கழிந்த நளவத்ஸரம் முதலாகவே வெளியிட்டு வருகிறேனென்பதை உலகமறியும். இப்போது பிங்களவாண்டின் ஸமாப்தி ஸமீபித்திருப்பதால் அவையெல்லாவற்றிற்கும் சிகரமாக ஸ்ரீராமாநுஜ விஜயமென்னும் இந்நூலை வெளியிடுகின்றேன். எம்பெருமானாருக்குத் திருப்பாவை ஜீயர் என்று அந்நாள் தொடங்கியே ப்ரஸித்தியிருப்பதனால் அதற்குச்சேர இதனைத் தொடங்குகின்றேன்.

## திருப்பாவைக்கு ஏற்ற அலங்காரம் எது ?

காவ்யரஸிகர்களுக்கு அலங்கார சாஸ்த்ரம் ஜீவநாடியாகவுள்ளது. அழகு பெறுத்துவது அலங்காரமெனப்படும். சப்தாலங்காரமென்றும் அர்த்தாலங்காரமென்றும் இருவகைப்பட்டவிதில் சப்தாலங்காரத்திற் காட்டிலும் அர்த்தாலங்காரம் மேம்பட்டது. வடமொழியில் அலங்காரமென்பது தென்மொழியில் அணியெனப்படும். சொல்லணி பொருளணி யென்கிற பாகுபாடு இதிலுமுண்டு. ப்ராஸம் முதலானவற்றால் சொற்களுக்கு அழகையுண்டாக்குவது சொல்லணி. இப்போது நாம் பொருளணியில் ஏகதேசம் ஆராய்ச்சி செய்ய இழிகின்றோம். **"இத்தம் சதமலங்காரா:"** என்றபடி நூறு வகையாகவுள்ள அர்த்தாலங்காரங்களில் ஸமாஸோக்தி, அப்ரஸ்துதப்ரசம்ஸை, ப்ரஸ்துதாங்குரம் என்கிற மூன்று அலங்காரங்களைப் பற்றி முன்னம் பேசுகிறோம்.

### ஸமாஸோக்தியலங்காரம்

"ஸமாஸோக்தி: பரிஸ்பூர்த்தி: ப்ரஸ்துதே அப்ரஸ்துதஸ்ய சேத்" என்பது ஸமாஸோக்தியலங்காரத்தின் லக்ஷணம். கவி ப்ரக்ருதமான வொரு செய்தியைக் குறித்துப் பேசுகையில் சொற்செறிவால் அப்ரக்ருதமான ஒரு செய்தியும் தோன்ற நின்றால் அங்கு ஸமாஸோக்தியலங்

காரமாகும். "முன்பு ஒருபுறம் மேடாயிருந்த இடமெல்லாம் இப்போது பள்ளமாயிற்று; மற்றொரு புறம் பள்ளமாயிருந்தவிடமெல்லாம் மேடாயிற்று" என்கிறுனொருவன். இவ்விஷயம் அவனுக்கு ப்ரக்ருதம்; இதிலிருந்து அப்ரக்ருதமான வொரு விஷயம் தோன்றுவது காணலாம்; அதாவது, 'தனிகனுயிருந்தவன் தரித்ரனுகிருன்; தரித்ரனுயிருந்தவன் தனிகனுகிருன்' என்று. ஆகவே இங்கு ஸமாஸோக்தியலங்காரம்.

## அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரம்

"அப்ரஸ்துதப்ரசம்ஸா ஸ்யாத் ஸா யத்ர ப்ரஸ்துதாச்ரயா" என்பது இவ்வலங்காரத்தின் லக்ஷணம். ப்ரக்ருதமான வொரு செய்தியைத் தோற்றுவிப்பதற்காகவே அப்ரக்ருதமான வொரு செய்தியைக் கவி வருணிப்பது அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரமாகும். 'பறவைகளில் மழைத் தெய்வத்தையன்றி மற்றெவரையும் எதிர்பாராத சாதகபக்ஷிதான் சிறந்தது' என்ருன் ஒரு கவி. அவனுக்கு இவ்விஷயம் விவக்ஷிதமன்று: 'எம்பெருமானிடத்திலன்றி மற்றெவரிடத்திலும் பல்லைக் காட்டாத பரமைகாந்தியே சிறந்தவன்' என்பதைச் சொல்லவிரும்பி, *ப்ரபந்நே சாதகந்யாய:* என்ற மூதுரையை மனத்திற்கொண்டு அப்ரக்ருதமான சாதக பக்ஷிப்ரசம்ஸையைச் செய்தான் கவி. ஆகவே இங்கு அப்ரஸ்துதப்ரசம்ஸை.

## ப்ரஸ்துதாங்குராலங்காரம்

இனி ப்ரஸ்துதாங்குரமென்னுமலங்காரத்தைப்பற்றிக் கேண்மின்; இதைப் பற்றின விமர்சத்தை முக்கியமாகக் கொண்டே இக்கட்டுரை யெழுதத் தொடங்கலாயிற்று. "ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:" என்று இவ்வலங்காரத்திற்கு லக்ஷணம் கூறப் பட்டுள்ளது. கவி வருணிப்பதும் ப்ரக்ருதமான செய்தி; அதிலிருந்து தோற்றுகின்ற வொரு செய்தியும் ப்ரக்ருதமானது; இப்படிப்பட்டவிடத்தில் ப்ரஸ்துதாங்குராலங்காரமாம். இதற்கு சந்த்ராலோகத்தில் காட்டியுள்ள உதாரணம் யாதெனில்; *கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம் கேதக்யா கண்டகேத்தயா* என்பது. இது வண்டை நோக்கி ஒரு காமினி சொல்லுவது. 'வண்டே! நல்ல மாலதீபுஷ்பமிருக்க, முள் நிறைந்த தாழையை ஏன் விரும்புகிருய்?' என்பது இதன் பொருள். இதில் வாச்யார்த்தத்திற்குமேல் வ்யங்க்யார்த்தமொன்று கண்டறியவேணும். வாச்யார்த்தம் தெரிந்ததே: வ்யங்க்யார்த்தம்—அபாயமற்ற பனைவியிருக்க அவளைவிட்டு அபாயம் மிக்க வேற்று மாதரிடத்தில் விருப்பங் கொண்ட கணவனை நோக்கிக் காதலி சொல்லுவதாம். ஆக இவ்விரண்டு பொருளும் ப்ரக்ருதமே யென்றும், 'ஒன்று ப்ரக்ருதம், மற்றொன்று அபரக்ருதம்' என்பது கிடையாதென்றும் கொள்ளப்படுகிறது.

குவலயானந்தகாரரான அப்பயதீக்ஷிதர் இங்கு எழுதுவது என்னவென்ருல், தன் கணவனேடுகூட உத்யானவனத்திற்குச்சென்ற காதலியொருத்தி அங்கு வண்டைக் கண்டு இங்ஙனே சொன்னளாதலால் இது ப்ரக்ருதமானதே; இதிலிருந்து வ்யங்க்யமானது பரநாயிகாஸக்த ஸ்வகீயநாயக சிக்ஷணம்; அதுவும் ப்ரக்ருதமானதே என்றெழுதி உடனே அவர்தாமே ஒருசங்கையைக் கிளப்பி ஸமாதானமுமெழுதியுள்ளார்; (அதாவது) அஃறிணையானவண்டை நோக்கிச் சொல்லுவதென்பது பொருந்தாதாகையாலே இங்கு வாச்யார்த்தம் ப்ரக்ருதமாக இருக்க முடியாதேயென்று சங்கித்து, இங்ஙனே பலவிடங்களில் காண்கிறோமென்று, மரத்தைநோக்கி ஒருவன்சொன்னதும், அதற்கு மரம் விடைகூறினதுமான ச்லோகமொன்றை யெடுத்துக்காட்டி ஸமாதானம் பண்ணியிருக்கிருர்.

சந்த்ராலோககாரர் காட்டின "கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம்"* என்கிற உதாஹரணத்தில் வண்டை விளித்துச் சொல்லுவதுமட்டுமேயுள்ளது. தீக்ஷிதர் காட்டியுள்ள "கஸ் த்வம் போ:! கதயாமி" என்கிற சுலோகத்தில் மரத்தை விளித்து வினவுவதும், வினவப்பட்ட மரம் விடை கூறுவதுமான அமைப்பு உள்ளதனல் இந்த வினுவிடைகள் அஸம்பாவிதமென்பதும் அசைக்க முடியாததாம். ஸுபாஷிதரத்ன பாண்டாகாரத்தில் அந்யாபதேசச்லோகங்களை ஆயிரக் கணக்காகக் காண்கிறோம்—மேகாந்யோக்தி:, ப்ரமராந்யோக்தி:, வ்ருக்ஷாந்யோக்தி:,

ம்ருகாங்யோக்தி: என்று மகுடங்கொண்ட சுலோகங்களெல்லாம் பெரும்பாலும் அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரத்திற்கு லக்ஷ்யமாகக் கூடியவையேயாகும். "ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:" என்ற லக்ஷணத்திற்குச்சேர ஆலங்காரிகர் காட்டின ஸமஞ்ஜஸமான லக்ஷ்யம் ஒன்றுகூட நாம் கண்டிலோம். திருப்பாவை முழுவதும் இவ்வலங்காரத்திற்கு லக்ஷ்யமென்று உபந்யாஸமுகமாகவும் க்ரந்தமுகமாகவும் உபபாதிப்பவனடியேன்.

## முத்ராலங்காரமென்றும் ஒன்றுண்டு

*ஸூச்யார்த்த ஸூசநம் முத்ரா ப்ரக்ருதார்த்தபரை: பதை:* என்பது அதன் லக்ஷணம். சில சில பதங்களையிட்டுக் கவி ஸூசிப்பிக்க நினைத்த (வேறு) அர்த்தத்தை ஸூசிப்பித்தல் முத்ராலங்காரமென்றபடி. ஒருவரை ஸ்துதிசெய்துகொண்டு போகையில் நக்ஷத்ரத்தையோ ஸம்வத்ஸரத்தையோ வ்ருத்தத்தையோ ஸூசிப்பிக்க விரும்பி அதற்கு அநுகுணமான பதத்தையோ பதங்களையோ ப்ரயோகிப்பர்கள் கவிகள்; அங்கு முத்ராலங்காரமாகும், திருப்பாவையில் இவ்வலங்காரமும் பலவிடங்களில் நன்கு தோன்ற நின்றது. திருப்பாவைக்கு அடியேனெழுதி வெளியிட்டுள்ள ஐந்தாறு வ்யாக்யானங்களில் இதெல்லாம் விளங்கக் காணலாம். ஆயினும் வழிகாட்டிவிடாமல் இங்கும் சுருக்கமாகத் தெரிவிக்கலாகிறது

## நீராட்டத்தின் மருமம்

திருப்பாவையில் முதற்பாட்டில் *நீராடப்போதுவீர்! போதுமினோ* என்றழைக்கப்படுகிறது. மூன்றும்பாட்டில் *நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்* என்றும், நாலாம் பாட்டில்*நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்து* என்றும், இருபதாம்பாட்டில் *இப்போதே யெம்மை நீராட்டு* என்றும், இருபத்தாரும்பாட்டில் *மார்கழி நீராடுவான்* என்றும் இங்ஙனே பலவிடங்களில் நீராட்டம் ப்ரஸ்தாவிக்கப்படுகிறது. ஆய்ச்சிகள் நீராடுமிடமான நீர்நிலைக்குச் சென்றார்களென்று கண்டிலோம். வ்யாக்யாதாக்களான பெரியவாச்சான்பிள்ளை முதலான பூருவாசாரியர்கள் "நீராடவென்னுமித்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ணஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாட லென்றார்கள். *ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்* என்றும் சொல்லிற்றிறே" என்றருளினர். இதுவன்றியும் ஆண்டாள் தன்னை நிர்தேசிக்குமிடங்களிலெல்லாம்* பட்டர்பிரான் கோதை *என்றும்* புதுவையர்கோன் விட்டுசித்தன்கோதை* என்றும் தனக்கு ஆசார்யஸம்பந்தத்தை நிரூபகமாக்கியே நிர்தேசித்தவளாகையாலே தான் ஆசார்யாபிமானத்தில் பழுத்தவளென்பதைப் பாசுரந்தோறும் காட்டியிருப்பதுங்காண்கிறோம். நீராட என்னும் ஸ்ரீஸூக்தியாலே*கரசரண ஸரோஜே காந்திமந்நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாதமார்க்கே ஹரிஸரஸி விகாஹனம் தெரிவிக்கப்படுவதுபோல, (திருவிருத்தத்தில்) *காலை நன்ஞானத்துறை படிந்தாடிக் கண்போது செய்து* என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே ஞானத்துறையான ஸதாசார்யத்துறையில் படிந்து குடைந்தாடுவதும் தெரிவிக்கப்படுகிறது. அதற்கும் அநுகுணமாகவேயன்றோ பதப்ரயோகங்கள் அற்புதமாக அமைந்துள்ளன. வாய் திறக்கும்போதே மார்கழி யென்று தொடங்கின ஆண்டாளின் உட்கருத்தை உய்த்துணரவேணும். உணர்த்துகின்றோம்கேண்மின்.

## மார்கழியென்கிற சொல்லின் மருமம்

மார்கழி என்கிற இது மார்க்க சீர்ஷ மென்ற வடசொல்லின் விகாரம். மிருக சீர்ஷ நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணமாஸியுள்ள மாதம் மார்க்கசீர்ஷமாஸம் என்றபடி. மாஸப் பெயர்கள் ஸௌரமாநரீதியிலும் சாந்த்ரமாநரீதியிலும் வழங்கப்படுகின்றன. மேஷம் விருஷபம் மிதுநம் இத்யாதி வ்யபதேசங்கள் ஸௌரமாநரீதி. சைத்ரம் வைசாகம் ஜ்யேஷ்டம் இத்யாதி வ்யபதேசங்கள் சாந்த்ரமாநரீதி. சித்திரை வைகாசி இத்யாதிகளான தமிழ் வழக்குக்களும் சாந்த்ரமாநஸம்ஜ்ஞையையே அநுஸரித்தவை; சித்ரா நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் ஒன்று கூடினால் சைத்ரம்; விசாகா நக்ஷத்ரமும் பௌர்ணமியும் ஒன்று கூடினால் வைசாகம். மேல் ஒவ்வொன்றையும் இப்படியே பார்த்துக் கொள்வது. இவ்வகையில், மிருகசீர்ஷ நக்ஷத்ரமும்

பௌர்ணமியும் ஒன்றுகூடினால் மார்க்கசீர்ஷமெனப்படுகிறது. நக்ஷத்ர திதிகளின் வ்ருத்தி ஹ்ராஸங்களுக்கு ஏற்ப (நாழிகையேறுதல் குறைதல்களுக்குத் தகுதியாக) முன் நக்ஷத்ரமோ பின் நக்ஷத்ரமோ (பௌர்ணமியோடு) கூடுதலுமுண்டு. அதைப்பற்றிச் சிந்தை வேண்டா. மார்க்கசீர்ஷமென்ற வட சொல்லின் பொருளிலேயே மார்கழி யென்ற தமிழ்ச்சொல் போந்ததென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. இப்பொருள் தவிர மற்றொரு பொருளும் மார்க்கசீர்ஷமென்னும் சொல்லுக்கு ஸம்பாவிதமே. அதாவது, (மார்க்க-சீர்ஷ) என்று இரண்டு சொல் வடிவங்களாகக் கொண்டு மார்க்கங்களில் தலையானது என்று கொள்வது. சீர்ஷமென்று தலைக்குப் பெயர். மார்க்கமென்றது உபாய மென்றபடி, உபாயங்களில் தலையானது என்றதாயிற்று. கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்திகளுக்கும்மேலே ஆசார்யாபிமானம் என்பது தலையான உபாயமாயிருக்கும். அது தான் மார்க்க சீர்ஷமென்கிறது. மார்கழி யென்பது மதுவே.

## ஆண்டாளுடைய நிஷ்டையின் நிரூபணம்

ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் உபாயங்களில் தலையானதை இரண்டு பாசுரங்களினால் நன்கு காட்டியுள்ளாள்: *கொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால், நானும் பிறந்தமை பொய்யன்றே* என்பது ஒரு பாசுரம். *நல்லவென் தோழி! நாகணைமிசை நம்பரர், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்? வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே* என்பது மற்றொரு பாசுரம் இவ்விரண்டு பாசுரங்களினாலும் ஆண்டாள் தனக்கு ஆசாரியன் வழியாகவே பேறு என்னுமிடத்தை அறுதியிட்டிருக்கின்றாள். கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்-சக்ரவர்த்தி திருமகனார்; அவருடைய சொல்லாவது *நத்யஜேயம் கதஞ்சந* இத்யாதிகள்; அவை பொய்யானாலுங் கூட, (நானும் பிறந்தமை பொய்யன்றே) நான் பெரியாழ்வார் வயிற்றிற் பிறந்தது பொய்யன்றே, எனக்குண்டான ஆசார்யஸம்பந்தம் பழுதாய் விடுமோ? ஒருகாலுமாகாது என்றபடி. இனி, "வில்லிபுதுவைவிட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்ற பாசுரம் ஸ்ரீவசநபூஷணத்தின் முடிவில் ஆசார்யநிஷ்டைக்குச் சார்பாக உதாஹரிக்கப்பட்டுள்ளது. அங்கு மணவாளமாமுனிகளின் வியாக்யானம் ஸேவிப்பது. ஆகவிப்படி ஆண்டாள் கடைப்பிடித்த சரமோபாயத்தையே திருப்பாவையில் உயிர்நிலையான பொருளாக வைத்துப் பேசுகிறாள். அதற்கு ஸூசகம் மார்க்க-சீர்ஷ பதபர்யாயமான மார்கழி என்னும் முதற்சொல்.

## மார்க்க-சீர்ஷ என்று பிரிப்பதன் பொருத்தம்

வாஸுதேவ சப்தத்திற்கு தத்தித வ்ருத்தியாலே வஸுதேவாத்மஜனென்னும் பொருள் தேறியிருக்கவும் பட்டர் வாஸு, தேவ: என்கிற பதங்களுக்கு ஸமாஸமாகவுங் கொண்டு பாஷ்யமிட்டதுபோல, இங்கும், மார்க்க-சீர்ஷ என்கிற பதங்களுக்கு ஸமாஸமாகக் கொள்வதில் குறையொன்றுமில்லை யென்க.

வாஸு தேவபதத்தை வாஸு வென்றும் தேவனென்றும் பிரித்தது பட்டர் பாஷ்யத்தில் மட்டுமே காண்பதன்று; வாஸு தேவநாமம் வ்யாபகமந்த்ரங்களில் ஒன்றான த்வாதசாக்ஷரியின் உள்ளீடாகையாலே பதத்வயமாகப் பிரிப்பது மந்த்ர சாஸ்த்ர ஸித்தமுமென்பது உணரத்தக்கது.

நீராட என்பது பகவத்ஸம்ச்லேஷத்தைச் சொல்லுகிறதென்று பூருவர்கள் வியாக்கியானம் செய்தருளினாலும் நீராட்டமென்பதும் ப்ரக்ருதார்த்தமேயாகும். நாச்சியாருக்கு நீராட்ட மஹோத்ஸவம் திவ்யதேசங்கள்தோறும் தொன்று தொட்டு நிகழ்ந்துவருகையாலே அதுபற்றிய சப்த விந்யாஸங்களும் ப்ரக்ருதார்த்தமே யொழிய அப்ரக்ருதார்த்தமாகாது. ஆக, தெள்ளிய பொருளும், தோன்றும் பொருளுமாகிய எல்லாம் ப்ரஸ்துதமே யாகையாலே *ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:* என்னும் லக்ஷணத்திற்குத் திருப்பாவைபோன்ற லக்ஷ்யம் வேறுகிடைப்பரிது என்னலாம்.

## ஆசார்யபரமான பொருளின் பொருத்தம்

*நாராயணனே நமக்கே பறைதருவான்* என்று ஸ்பஷ்டமான சொல்லையிட்டுத் தொடங்கி *வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை* என்று ஸ்பஷ்டமான சொற்களையிட்டுத் தலைக் கட்டியிருக்க ஆசார்யபரமான அர்த்தத்தை எப்படி ஏறிடக்கூடும்! என்று திகைக்கவேண்டா; *ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ர பாணிநா* என்றும்*பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து* என்றும், *சேமங் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ? —தாமம் துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்குமுளவோ பெருமானுனக்கு?* என்றும் இங்ஙனே யுள்ள பல பிரமாணங்களை யநுஸந்தித்தால் ஏறிட்டுரைக்கும் கிலேசம் சிறிதுமில்லையென் றுணரலாம்.

*வங்கக் கடல்கடைந்த வென்கிற உபஸம்ஹாரத்திற்குங் கேளீர். [வங்கக் கடல் கடைந்த] ச்ருதிஸாகரமும் த்ராவிட வேதஸாகரமுமாகிற கடல்களைக் கடைந்தவர் ஆசாரியர். இங்கே *மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தால் கடைந்து, துறைப்பால்படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிழ்தம், கறைப் பாம்பணைப் பள்ளியான் அன்பரிட்டங் களித்தருந்த நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே* என்ற பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் பாசுரமுணரத்தக்கது. (மாதவனை) மஹாதபஸ்வி யென்றபடி. (கேசவனை) குதிரை வடிவங் கொண்டுவந்த கேசி யென்னு மசுரனொருவனைக் கொன்று கண்ணன் கேசவனுயினன். இந்திரியங்களாகிற பல குதிரைகளை வலியடக்கி ஆசாரியர் இத்திருநாமம் பெறுவர். ஜிதேந்த்ரியரென்கை. இப்படிப் பட்ட ஆசார்யரைப் பணிந்தவர்கள் யாரென்னில்; (திங்கள் திருமுகத்துச் சேயிழையார்) ஆசார்ய ஸந்நிதானத்திலிருந்து க்ரஹிக்கப்பட்ட தாபஹரங்களான அர்த்தங்களினால் ஸௌம்ய மான திருமுகமண்டலத்தையுடையவர்களாய் ஆத்ம குணங்களாகிற பூஷணங்களாலே பூஷித ராகப்பெற்றவர்கள். கோபிகள் கண்ணனிடத்திலே பேறுபெற்றாப்போலே சிஷ்யர்கள் ஆசார்ய ஸந்நிதியிலே பேறு பெற்றார்களென்க. ஆக இவை ஸ்தாலீபுலாகந்யாயேந தெரிவிந்தவத்தனை. *வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதை தமிழ் ஐயைந்துமைந்து மறியாத மானிடரை வையஞ் சுமப்பதும் வம்பு* என்று துணிந்து கூறுமபடியான பெருமைவாய்ந்த திருப்பாவையில் தோண்டத் தோண்டச் சுரக்கும் பொருள்கள் அபரிமிதமாகத் திகழ்வதுபற்றியே எம்பெருமானார் திருப்பாவை ஜீயர் என்று ப்ரஸித்தியுண்டாம்படி இதிலே யீடுபட்டார். *நாயகனாய் பாசுரத்தில் ஒவ்வொரு சொல்லும் முத்ராலங்கார ரீதியில் எம்பெருமானாரை நிஸ்ஸந்தேஹமாக நினைவூட்டு மது. அதை இதோ விவரிக்கப்போகிறேன். அற்பமதிகளான நாமே இதை அறியும்போது ஸர்வஜ்ஞரான எம்பெருமானார் இதை அறியாதிருக்க ப்ரஸக்தியில்லை; அறிந்துவைத்தும் தம் பெருமையைத் தாமே பேசக்கூசி அறியாதவர் போலவே யிருந்திருப்பர்; இந்த விஷயத்தில் நாம் பாக்யசாலிகளென்று உகக்கலாமன்றோ. நாம் அநுஸந்திக்கும்பொருள் பொருந்துகின்றதா இல்லையா? என்று ஆராய்ந்து பாருங்கள்.

## நாயகனாயும் - எம்பெருமானாரும்

(நாயகனாய் நின்ற) ஆசார்ய கோஷ்டியில் நடுநாயகமாக நிற்பவர் எம்பெருமானார் என்று காட்டுகிறபடி. "அமுநா தபநாதிசாயி பூம்நா யதிராஜேந நிபத்த நாயகஸ்ரீ:" என்ற யதிராஜ ஸப்ததிஸூக்தியும் காண்க. [நந்தகோபன்] எம்பெருமானைப் புத்திரனாகப் பெற்றவிஷயத்தில் எம்பெருமானார்க்கு நந்தகோபனோடு ஸாதர்மியம். யதிராஜ ஸம்பத்குமாரனென வழங்கப்படுகிற செல்வப்பிள்ளையை க்ருஷ்ணகிசோர ஸ்தானீயனாகக் கொள்க. [உடைய] ஸ்வாமிக்கு உடையவரென்று வழங்குந் திருநாமத்தை ஸூசிப்பித்த படி. [கோயில்காப்பான்] கோயிலென்கிற சொல் திருவரங்கம் பெரிய கோயிலை மட்டும் சொல்லுவதாகவுங் கொள்ளலாம். மற்றும் பல கோவில்களையும் சொல்லுவதாகவுங் கொள்ள லாம். *தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே*, என்றும் *ஸ்ரீமந்

**ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய*** என்றும் சொல்லுகிறபடியே திருவரங்கச் செல்வத்தைக் காத்தருளினவரென்கை. *மன்னிய தென்னரங்காபுரி மாமலைமற்று மூவந்திடு நாள்* என்கிறபடியே ஸகல திவ்ய தேசங்களையும் உத்தரிப்பித்தவர் ஸ்வாமியே யாதலால் கோயில்களைக் காத்தருளினவரென்பதும் பொருத்தமே. **[கொடித்தோன்றுந் தோரண வாசல காப்பானே!]** *கொடியணி நெடுமதிள் கோபுரம் குறுகினர்* என்றும் *நெடுவரைத் தோரணம் நிறைத்தெங்குந் தொழுதனலருகே* என்றும் சொல்லுகிறபடியே கொடியும் தோரணமுமான வாசல்-பரமபதவாசல்; அதுதன்னையும் ஸ்வாமியெம்பெருமானுர் தம்முடைய ஆளுகையிலே வைத்துக் கொண்டிருப்பவரென்கை. எம்பெருமானுர் திருவருளைப் பெருதவர்களுக்கு அந்த வாசலிற் புகுவது அரிது என்கிற ப்ரஸித்தியைக் காட்டினபடி. **[மணிக்கதவம் தாள்திறவாய்]** மணியாவது ரத்னம்; நவரத்னமென்று சொல்லப்படுவதனுல் ஒன்பது ரத்னங்கள் என்று ப்ரஸித்தம். நவரத்னம் போன்ற ஒன்பது திவ்யக்ரந்தங்களை ஸ்வாமிபணித்தருளினுர். ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபம், வேதாந்த ஸாரம், வேதார்த்தஸங்க்ரஹம், கீதாபாஷ்யம், சரணுகதி கத்யம், ஸ்ரீரங்ககத்யம் ஸ்ரீவைகுண்டகத்யம், நித்யம் என்று ஒன்பது திவ்ய க்ரந்தங்களையே இங்கு மணிக்கதவமென்கிறது. கதவு எப்படி பதார்த்தங்களுக்கு ரக்ஷகமோ அப்படியே இந்த திவ்யக்ரந்தங்களும் மறைப் பொருள்களுக்குச் சேமக்காப்பாக அமைந்தவை யாதலால் கதவென்றது மிகப்பொருத்தம்.(கதவு, கதவம்—இவை பர்யாயமே.) இந்த க்ரந்தங்களிலுள்ள பொருள்களை நாங்கள் அநுபவிக்கும்படி செய்தருளவேணுமென்பது **தாள்திறவா** யென்றதன் கருத்து. "ஆயர் சிறுமியரோமுக்கு மணிக்கதவம் தாள்திறவாய்" என்று அந்வயிப்பது. அறிவிலிகளான எங்களுக்குப் புரியும்படியருளிச் செய்யவேணு மென்கை.

[மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்] எம்பெருமான் தன்னுடைய சாஸ்த்ரங்களிலே முன்னமே தேவரீரைப்பற்றிச் சோதிவாய் திறந்து பணித்துள்ளானென்று கருத்து. ***கலௌ ராமாநுஜஸ் ஸ்ம்ருத: *கலௌ கச்சித் பவிஷ்யதி* உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந:*** இத்யாதி ப்ரமாணங்களை இங்கே அநுஸந்திப்பது.

(இது ஸம்க்ஷேபமாகஸ ஙசிப்பித்தபடி)

## ஸ்வாபதேசார்த்தப்ரதிஷ்டாபனம்

இதைத்தொடர்ந்து இன்னும் சிலவிஷயங்களும் கேளீர். திருச்சந்தவிருத்தத்தில் (49) *கொண்டைகொண்ட கோதைமீது* என்கிற பாசுரத்தின் பின்னடிகள் "நண்டையுண்டு நாரைபேர வாளைபாய நீலமே, அண்டைகொண்டு கெண்டைமேயும் அந்தணீரரங்கமே" என்பன. இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை தமது வியாக்கியானத்தில் ஸ்வாபதேசார்த்த மருளிச்செய்து, உடனே "இப்பாட்டில் சொன்ன ஸ்வாபதேசங்கள் இவர்க்கு நிலமல்லாதபோது தேசத்தையாச்ரயித்தநுபவிக்க இழிந்தவர்க்கு இப்பாட்டால் ஒரு ப்ரயோஜனமில்லை" என்றருளிச் செய்து தலைக்கட்டினுர். இங்கே அரும்பதவுரை வருமாறு: "சப்தத்துக்கு அர்த்தம் வேருயிருக்க இப்படி ஸ்வாபதேசத்திலே ஒதுக்குவானென்னென்ன அருளிச் செய்கிருர் (இப்பாட்டில்) இத்யாதி. நிலமல்லாதபோது விவக்ஷிதமல்லாதபோது" என்பதாக. பெரியவாச்சான்பிள்ளை எல்லாவிடங்களுக்கும் ஸ்வாபதேசார்த்தமருளிச்செய்யாவிடினும் இங்கு இங்ஙனே அருளிச் செய்து வைக்கையாலே எங்கும் ஸ்வாபதேசார்த்தங்களை விவேககுசலர்கள் உய்த்துணரவேணுமென்று காட்டியருளினராகிருர் என்பதில் ஐயமில்லை.

ஆசார்யஹ்ருதயத்தில் 139 ஆம் சூர்ணை முதலாக 155 ஆம் சூர்ணையளவாக ஸ்வாபதேசார்த்தங்களை விளக்கியருளியிருப்பது காணுமளவில் நம் பூர்வாசாரியர்கள் ப்ரவசனங்களில் ஸ்வாபதேசார்த்தங்களை மேம்பட உரைத்து வந்தார்களென்பது தெளிவாகும். திருப்பாவையை யநுபவிப்பதென்ருல் அதிலுறையும் விசேஷார்த்தங்களையும் ஸ்வாபதேசார்த்தங்களையும் விளக்காமல் எப்படியநுபவிப்பது? விசேஷித்து திருவிருத்தத்திற்கும் திருப்பாவைக்கும் ஜீவநாடியாயிருப்பது ஸ்வாபதேசார்த்தமே. நான்கு பாஷைகளிலும் (அதாவது, வடமொழி தென்மொழி வடுகு ஹிந்திகளில்) நாமெழுதி வெளியிட்டு உலகம் பரவியுள்ள விபுலவியாக்கியானங்களைக்கொண்டு

களிப்பவர்களும் அவற்றை அப்படியப்படியே ப்ரவசனம்செய்து போருமவர்களும் எங்கும் மலிந்துள்ளார்களன்றோ. அஸூயையற்றவர்கள் இதைத்தாங்களே ஸபையில் சொல்லியும் வருகிறார்கள்.

சில ப்ரவசனகர்த்தாக்கள் (சொல்லி வருவதாவது) ஸ்வாபதேசார்த்தமென்று ஒரு பொருளை ஏறிட்டு யதேஷ்டமாகச் சொல்லுவது பூர்வாசார்ய வியாக்கியான விருத்தமென்றும், முக்கியமாக ஸ்வாபதேசமென்னும் பதமே பொருளற்றதென்றும் சொல்லுவதாகக் காதில் விழுகிறது. பூருவாசாரியர்கள் காட்டியருளியிருக்கும் வழி வழுவாது ஸ்வாபதேசார்த்தங்களைக் கண்டறிந்து சொல்ல சக்தியற்றவர்கள் இப்படிச் சொல்லுவதில் வியப்பில்லை.

## ஸ்வாபதேச சப்தப்பொருத்தம்

ஸ்வாபதேசமென்கிற ஸம்ஜ்ஞை ஸம்ஸ்க்ருத சாஸ்த்ர ஸரணியின்படி பொருந்தாதென்பவர்களின் அபிப்ராயம் யாதெனில்; அபதேசமென்கிற சொல்லானது வ்யாஜமாகக் கைக்கொள்ளப்பட்ட அமுக்கியத்தைக் குறிப்பதாகும். இது (அந்ய) என்கிற சொல்லோடு சேர்ந்து அந்யாபதேசம் என்று ஆகலாம்; அமுக்கியமான வேறு பொருளைக் குறிப்பதென்று அச்சொல்லுக்குப் பொருள் சொல்லப் பொருத்தமுண்டு. அபதேசமென்கிற சொல்லானது (ஸ்வ என்கிற பதத்தோடு எங்ஙனே சேரும்? சேர்ந்தால் என்ன பொருள் கிடைக்கும்? அந்யமான பொருள் அமுக்க்யமாயிருக்கத் தகுதியுண்டு; ஸ்வம்மான பொருள் அமுக்க்யமாயிருக்கத் தகுதியில்லையே. வேறொன்றை வியாஜமாக்கிச் சொல்லுவது அந்யாபதேசம். இந்த ரீதியில் ஸ்வாபதேசமென்பதற்கு 'தன்னையே வியாஜமாக்கிச் சொல்லுதல்' என்றல்லவோ பொருளாகும். இது ஸம்பாவிதமன்றே. ஆகவே இச்சொல் அஸங்கதம்—என்பது ஆக்ஷேபகர்களின் வாதமாகும்.

இனி இந்த ஆக்ஷேபத்தை நிரஸிக்கும்வழி காட்டுகிறோம். வடமொழியில் வ்யபதேசமென்றொரு சொல் ப்ரஸித்தம். அதற்கு என்ன பொருளோ அதுவேதான் அபதேசமென்பதற்கும் பொருள். வி என்கிற உபஸர்க்கம் சேர்ந்தாலும் சேராவிடினும் பொருள் ஒன்றே. வ்யபேக்ஷா, அபேக்ஷா என்கிற சொற்களை இங்கு நிதர்சனமாகக்கொள்க; ஸாபேக்ஷ:, நிரபேக்ஷ: என்கிற பதங்களின் ஸ்தானத்திலேயே 'ஸவ்யபேக்ஷ:, நிர்வ்யபேக்ஷ:, என்கிற பதப்ரயோகங்களையும் ப்ரஸித்தமாகக் காண்கிறோம். "ஸ்வக்ரியாஸாதநவ்யக்ரோ நாலமந்யத் வ்யபேக்ஷிதும்' என்பது தண்டியின் காரிகை. இங்கு "நாலமந்யதபேக்ஷிதும்" என்றாலும் ச்லோகம் கூடும். பொருளிலும் குறையில்லை. ஆயினும் வி என்னுமுபஸர்க்கத்தைச் சேர்ந்து ப்ரயோகிக்கப்பட்டது. அது சேர்ந்தாலும் சேராவிட்டாலும் பொருள் ஒன்றே. இங்ஙனே காட்டக்கூடிய நிதர்சநங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல; பலபலவுள்ளன. அபகம: வ்யபகம:, அபாய: வ்யபாய:.........என்றிங்ஙனே கண்டுகொள்வது. இவ்வண்ணமாகவே வ்யபதேசமென்பதும் அபதேசமென்பதும் பர்யாயமாக வழங்கும். வ்யபதேசமென்பதற்கு 'குறித்தல்' என்று பொருள், அபதேசமென்பதற்கும் அதுவே பொருள். முக்கியமாக உத்தேசிக்கப்பட்ட பொருளைக்காட்டிலும் வேறானவொரு பொருளைக் குறிப்பது அந்யாபதேசம். அந்யஸ்ய அபதேச: அந்யாபதேச: ஸ்வஸ்யைவ அபதேச: ஸ்வாபதேச: ஸ்வம் அபதிச்யதே அஸ்மிந்நிதி ஸ்வாபதேச: அந்யத் அபதிச்யதே அஸ்மிந்நிதி அந்யாபதேச. என்னவுமாம். ஒரு பதத்திற்கு எத்தனை பொருள்களுண்டு, எத்தனை பொருள்களில் பிரயோகமுண்டு என்பதை ஆழ்ந்த அறிவுடையார் ஆராயவல்லர். அபதேச பதத்திற்கு இன்னது அர்த்தம் என்பதைக் கீழே விவரித்தோம். ஸுப்ரஸித்தமான நாமலிங்காநுசாஸநமென்கிற அமரகோசத்தில் மூன்றாவது காண்டத்தில் நாநார்த்த வர்க்கத்தில் 'பதே லக்ஷ்யே நிமித்தே அபதேசஸ் ஸ்யாத்" என்றுள்ளது. *அபதேச புமாந் லக்ஷ்யே நிமித்தவ்யாஜயோபி* என்பது விச்வகோசம். இப்படியே பலபல கோசங்கள் கிடைக்கும். லக்ஷ்யமென்கிற முதற்பொருளைவிட்டு வேறு பொருளைப்பற்றிக்கொண்டு ஆக்ஷேபம் செய்வது ப்ராஜ்ஞக்ருத்யமன்று. அந்யார்த்தத்தை லக்ஷ்யமாகக் கொண்டது அந்யாபதேசம்; ஸ்வம்மான அர்த்தத்தை லக்ஷ்யமாகக்கொண்டது ஸ்வாபதேசம் என்றும் எளிதாகத் தெளிய வழியிருக்க, விபரீதவழிகளிற்புகுந்து க்ஷேபிப்பதே! நன்னூலில் "எப்பொருள் எச்சொலின் எவ்வாறுயர்ந்தோர், செப்பினரப்படி செப்புதல் மரபே" என்பது ஒரு சூத்திரம். ஒரு பொருளில் பெரியோர்கள் ஒரு சொல்லை வழங்கி வந்தால்

கீழுள்ளவர்கள் அதையே ஆதரித்துப் பேச வேண்டுமென்பது இதன் தாற்பரியம். ஸ்வாபதேச அந்யாபதேச பதங்கள் இன்று நாம் புதிதாகப் படைத்தவையல்ல. நம் ஸம்ப்ரதாய க்ரந்தமாக அவதரித்துள்ள ப்ராசீநாசார்ய மணிப்ரவாள நூல்களில் மிகமிக இடம் பெற்றவை இச்சொற்கள். இவற்றுக்கு ஒருவிதமான உபபத்தியும் இல்லாமற்போனாலுங்கூட 'ஸாங்கேதிக சப்தங்களிவை' என்றுகொண்டு உகந்திருக்கக் கடமையுண்டு. வஸ்துஸ்திதியில் உபபத்திக்கு ஒரு குறையுமில்லையாயிருக்க குசோத்யம் செய்வது தவறு.

நமது ஸம்ப்ரதாயத்தில் புருஷகாரமென்கிற சொல் வழங்கி வருகின்றது. இச்சொல் மணிப்ரவாள நூல்களில் மட்டு மன்றிக்கே பூர்வாசார்யாநுக்ருஹீத ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களிலும் ஆதரிக்கப்பட்டுள்ளது. இது ஸம்ஸ்க்ருத நிகண்டுகளில் எதிலும் காணக்கிடைக்காது. *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:* இத்யாதி பகவச்சாஸ்த்ரவசனங்களில் மலிந்துள்ளது. இச்சொல் எப்படி நிஷ்பந்நமாகிறதென்று வேதாந்த தேசிகன் விமர்சிக்கப்புகுந்து என்ன ஸமாதானம் எழுதியிருக்கிறாரென்பதை நோக்கவேணும். இது தர்மபரமான சொல்லா? தர்மி பரமான சொல்லா? என்றும் விமர்சிக்கவேணும். இவ்விசாரங்களை தேசிகனே செய்தருளி, ஸம்ப்ரதாய முறைமையில் வழங்கிவருமிச் சொல்லில் நமக்கென்ன விசிகித்ஸை என்று முடித்து நின்றார். ஸ்வாபதேசாந்யாபதேச பதங்கள் புருஷகார சப்தம்போலே கைகூப்பிநிற்க வேண்டியவையல்ல. சாஸ்த்ரீயமான உபபத்தி பொருந்தியவை—என்பது புநருக்தம். ஆக இவ்வளவும், ஸ்வாபதேசார்த்தமென்கிற சப்தப்ரயோகமே அஸாது என்றவர்களது கலக்கத்தை அகற்றினோம்.

ஒலிவடிவத்தின்மேல் ஸ்பஷ்டமாகக் கிடைக்கிற பொருளுக்குமேற்பட ஸ்வாபதேசார்த்தமென்று ஒன்று சொல்வது அநவஸரம்—என்பவர்கள் அலங்காரசாஸ்த்ரவைதேசிகர்களென்பதை முந்துற முன்னமே விளக்கியாயிற்று. ஆண்டாள் தானும் *கீசு கீசு பாசுரத்திலே "பேசின பேச்சு கேட்டிலையோ" என்றதே பேச்சரவம் கேட்டிலையோ ? என்றதை ஊன்றி நோக்கினால் நல்ல தெளிவுவிளையும். ரவ; என்னும் வட சொல்லே அரவமென்றாயிற்று. த்வனியென்பது அதன் பொருள். 'திருப்பாவையில் வெறும் சப்தார்த்தமேயா கேட்டாய் ? த்வனிப்பொருள் கேட்கவில்லையோ?' என்று ஆண்டாள்தானே கேட்பது போலிரா நின்றதே! *கலந்துபேசின பேச்சரவங் கேட்டிலையோ?* என்றது உயிரானது. ச்ருதீதிஹாஸபுராணாதிகளைக் கலந்து பேசுவர் பெரியோர்...* முன்னோர் மொழிந்த மொழிகளோடு பிணங்காமல் அவற்றோடு கலந்து பேசுவார்கள் *

---

ஸ்ரீரஸ்து.

★★★★★★★★★★★★★★0★★★★★★★★★★★★★★

# திருப்பாவை ஜீயர்

★★★★★★★★★★★★★★0★★★★★★★★★★★★★★

நம்முடைய ஸம்பிரதாயத்தில் எம்பெருமானார்க்குத் திருப்பாவை ஜீயரென்று ஸுப்ரஸித்தமான வ்யபதேசமுள்ளது. திருப்பாவையில் மிக்க ஈடுபாடுகொண்டு அதை யநுஸந்திப்பதில் போர, அபிநிவிஷ்டராயெழுந்தருளி யிருந்ததுபற்றி அங்ஙனே வ்யபதேச முண்டாயிற்று என்பது தவிர மற்றுமோர் சிறந்த ஹேதுவுமுண்டு. அதாவது, திருப்பாவையில் ஒவ்வொரு பாசுரத்திலும் எம்பெருமானாரைச் சிந்திக்கவேண்டும்படியான சொற்றொடர்கள் அமைந்திருக்கின்றன வென்பதே. இஃது ஏறிட்டுரைக்கும் முறையிலன்றிக்கே ஏற்ற முறையில் விவரிக்கப்படுமாறு காண்க.

